உ

கடவுள் துணை.

அகத்தியமுனிவரருளிச்செய்த

பெருநூல்

# வயித்தியகாவியம் - 1500.

இஃது

## ஆறுமுகதேசிகர்

அவர்களால்

பரிசோதிக்கப்பட்ட பிரதிக்கிணங்க,



சென்னை

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1917.

இதன் விலை அணா—12.



உ

கடவுள் துணை.

# அகத்தியமகாமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# வயித்தியகாவியம் - 1500.

காப்பு.

பாருடன்கணேசன்பாதம் பணிந்துமுக்குணங்களாக
வாகடத்தொகுதியெல்லாம் வகுத்தசூத்திரமதாக்கி
ஆகமவிதியினாலா யாய்ந்திடுநோய்கட்கெல்லாம்
போகநல்மருந்துசொல்வோம் புலத்தியாபொருந்தக்கேளே. க

பொருந்துமோருந்திக்கீழே புகன்றெழுஞ்சுழியைப்பற்றி
எழுந்தவோர்நாடிதானு மெழுபத்தீராயிரந்தான்
தெரிந்ததோரிவற்றிற்பத்து திசைநாடியிவற்றில்மூன்றால்
பரிந்ததோர்வாதபித்தம் படையமறிந்துபாரே. உ

அறிந்துமேநாடிதன்னை அடைவுடன்கருதவேண்டி
எரிந்ததோரிடைதான்வாத மியல்புடனரம்பில்நிற்கும்
தெரிந்துகொள்சுழிதானையஞ் சேர்விடமெங்கேயென்னில்
பிரிந்துகொள்மலமாம்வாதம் பேர்பெறுநீராம்பித்தம். ங

பித்தத்தின்கீழையையம் புரண்டுமேவிந்திற்சேரும்
குற்றமேசேருமையங் குதிதனைக்கூர்ந்துகாணும்
பித்தத்தைப்பிரித்துநன்றாய்ப் பேசுவோம்பேதம்போக்கி
பத்துதைக்குறியாயெண்ணிப் பரிவுடனறிந்துபாரே. ச

பாரப்பாயிடைதான்கேளு பரிவுடனிடதுகாலில்
காரப்பாபக்கமாறிக் கபாலத்திற்சாடிப்பின்னும்
சாரப்பாவலக்கரத்திற் சார்ந்திடும்பின்கலைதான்
பேரப்பாவிடக்கரத்திற் பொருந்திப்போஞ்சுழினைகேளே. ரு

கேளப்பாபுருவமத்தி சுழினையாங்கீழேமூன்றில்
நாளப்பாநவதாதாகி நடந்திடும்நாடிபாரு
தேளப்பாநாடிபத்துந் தெசவாய்வுடனேசேரும்
சூளப்பாதசதானங்கள் சொல்லுறேன்சொல்லுறேனே. சா

வேறு.

தாதுமூலம்.

சொல்லுமீறன்காமியந்தான் குதிக்கால்சந்து சொற்பெரியவுந் திமைத்தான்பற்றிநிற்கும், சொல்லுமேறன்புருவமத்திகா.துமூக்கு து கைபத்தில்நாளின்றாதுடர்ந்துமாறம், சொல்லுறேனுயிர்த்தெழுந் தநாடிமாறில் சேதிக்கில்தசதானந்தோன்ருதையா, சொல்லுறேன் சாகான்காண்பிணிதான்தீருந் துஞ்சுகிறவிபரத்தைச்சூட்டுறேனே.

பட்சக்குறி.

துஞ்சியெழும்வாதபித்தமுயிர்தானப்பா சூட்சமாய்த்துன்றி யதுசுமூன்றுதேய்ந்து, மிஞ்சியேமத்திமத்தில்குருதித்தம்மில் மேவி யேமார்புள்ளேவாங்குமாகில், அஞ்சியேபட்சமொன்றிலடங்குஞ்சீ வனரகராவவத்தையிதுவறிந்துவிந்த, பஞ்சியேசூத்திரமாம்வாதபி த்தம் பக்குவத்தைநன்ருகப்பார்க்கநன்றே. அ

திரிநாடிநிதானக்குறி.

வேறு.

அறிவதுவாதந்தானு மாத்திரையரைதானேடில்
செறிவதுபித்தமப்பா சேர்சமமென்றுய்ப்பின்னும்
பிறிவதுவையந்தானும் பிரண்டதுகால்தானேடில்
அறிவதுசமமதாகு மபக்கமுமில்லைகாணே. ௬

வாதமீறினல்.

காணப்பாவாதமீறில்கால்கைகள்பெருத்துநோவும்
பூணப்பாகுடல்புரட்டுமலசலம்பொருமிக்கட்டும்
ஊணப்பாகுளிருங்காய்ச்சலுடம்பெல்லாங்குத்தும்வாய்வு
வீணப்பாகுதமிறுக்கும்வியர்வையும்வேர்க்குந்தானே. ௰

பித்தமீறினல்.

தானென்றபித்தமீறில் சடமெல்லாங்காந்தல்காணும்
ஊனென்றவாந்திவாய்நீ ரூறியேபொழுகுஞ்சாலம்
வானென்றமாட்டிலேகு மண்டையிற்குத்துண்டாகும
தெனென்றவிக்கல்மூர்ச்சை செவியடைப்புண்டாம்பாரே. ௰௧

சேத்துமமீறினல்.

பாரப்பாவையமீறில் பாசத்தினனல்தான்மீறும்
நோப்பாவிளக்குந்தேக நெஞ்சுடன்விலாவுநோகும்

தாரப்பாசுரமுங்காயுஞ் சாதமும்வெறுக்குநாளில்
ஓரப்பாவிரத்தங்கக்கு முடல்வற்றுஞ்சுரம்பேராமே. ௰௨

நாடிமூன்றுமறிய.

ஆமப்பாவாதந்தானுமனநடைகோழியாமை
தாமப்பாபித்தந்தானுந்தவளையைப்போலேபாயும்
சாமப்பாவையந்தானுஞ்சர்ப்பம்போலோடுமோடும்
நாமப்பாகண்டுசொன்னோம்நரம்பொன்றில்நாடிமூன்றே. ௰௩

வாதபித்தசேத்துமநிறம்.

மூன்றுபேர்நிறமுஞ்சொல்வேன் முதல்வாதங்கறுப்புசெம்மை
மான்றியபசுமைபச்சை மஞ்சளாயிருக்கும்பித்தம்
தோன்றியவெண்மையப்பா சோர்விலாவையமாகும்
ஊன்றியநிறங்கள்சொன்னே னுத்தமரறிவர்தானே. ௰௪

பஞ்சபூதக்கூறறிய.

தானென்றபஞ்சபூதஞ்சரீரத்திற்கேளுகேளு
பேனென்றதசைகளெல்லாம்பிருதிவியுற்றுப்பாரு
மானென்றவிரத்தந்தண்ணீர்மைந்தனேயப்புவாகும்
தேனென்றவெதுப்புதானுந்தேயுவின்அறிவுகூறே. ௰௫

வாதபித்தசேத்துமமிருப்பிடம்.

அறிந்திடுமெல்லாமொன்றாயாவிக்குமதிர்வானந்தான்
செறிந்திடும்பித்தந்தானுஞ்சேர்ந்திடுநாவிலேதான்
முறிந்திடுவன்னிதானுமூடிடுங்கண்ணிலேதான்
பறிந்திடும்வாய்வுதானும்பரிசிக்குமெங்கும்பாரே. ௰௬

பாரப்பாகாதிலேதான்பரிசிக்குமொன்றாய்மைந்தா
பேரப்பாவாதவாய்வுவப்பனேபித்தம்வன்னி
ஆரப்பாசேத்மவாயுவப்பனேவாதபித்தம்
நேரப்பாவையமப்புநிறைந்தவையிதுமூன்றுமே. ௰௭

இதற்கு ஆதாரம்.

ஆமப்பாமூன்றுபேர்க்குமாதாரம்வாயுவாகும்
ஏமப்பாவாயுசேரிலெண்பிலமுடைத்தாய்நிற்கும்
வேமப்பாவன்னிகூடில்வெந்துநீறாகுமாளுஞ்
சேமப்பாசிக்கின்றநோயெல்லாம்நெளிக்குந்தானே. ௰௮

ஒன்றோடொன்றுதொந்திப்பு.

தானென்றவன்னிவாய்வுதாண்டிமேற்கொண்டுதானால்
கானென்றசுரத்தாலோடிக்கனதாபமிகுதியாகும்
தானென்னவாயுவோடுஅப்புவுஞ்சாருமாகில்
தானென்றசீதருட்சைசார்ந்திடுந்தப்பிலாதே. ௰௯

தோஷம் அசாத்தியமறிய.

தப்பிலாத்தோஷந்தானுஞ்சார்ந்திடும்வாதுகேளாய்
கப்பிலாவன்னிவாதங்கருந்தோஷஞ்சாத்தியமாகும்
செப்பிலாப்பித்தத்தோடுசேரநல்வெண்மையாகி
செப்பிலாவையத்தோடுசெலப்பெறும்வாய்வுமாமே. ௨௰

ஓசை.

வாய்வுதானடங்கிற்றானால்மைந்தனேதோஷம்போகும்
வாய்வுதானுப்பிற்றானால்மண்ணொடுநீருமொன்றும்
வாய்வுதான்சலந்தான்ரண்டால்மைந்தனேவன்னிமாறும்
வாய்வுதானண்டஞ்சேரில்மண்டலவோசையாமே. ௨௧

விழி-நாசி-நாவு-நிதானக்குறி.

ஆமப்பாவோசையேழுமலரொளிவிழியைந்தாகும்
தாமப்பாநாசிமூன்றும்நாவினிரெண்டதாகும்
ஓமப்பாவிந்தவுண்மையுணர்ந்தவர்யோகியாகும்
வேமப்பாநாசிதன்னில்விழுங்குறிவிளம்பக்கேளே. ௨௨

இடைகலை சாரிதானம்.

கேளப்பாதினந்தான்மூன்றுகெடியிடைகலைதான்பாயில்
மாளப்பாபருவமூன்றில்மல்லியூர்புகுவான்பண்பாய்
நீளப்பாதினமிரண்டுபின்கலைதானேபாயில்
மூளப்பாதேகந்தானுமூவாண்டில்மரணமாமே. ௨௩

பின்கலை உபயம்.

மரணமாந்திங்களொன்றில்மைந்தனேகண்டுகொள்வாய்
மரணமாமூக்குவிட்டுவாய்வழிவாய்வுபாயில்
மரணமாந்தினந்தான்மூன்றில்வளம்பெறவழிந்துபாரு
மரணமாமலங்கள்மூன்றும்வற்றிசைபட்சமொன்றே. ௨௪

வாய்நீர்மும்மலக்குறி.

ஒன்றாகவாயில்நீரூற்றிரவிமேலுமிய
நன்றாகத்தானுமிரவிமறைந்திருந்தாக்கால்

பொன்ருகமூன் றுதிங்கள்பொறுத்தவுடன்பொன்றிடுவார்
ஒன்ருகநிழலிலேயில்வீழ்வர்காண்பட்சமிரண்டே. உரு

நிழற்குறி தோஷக்குறி நிதானம்.

வேறு.

காணப்பாதோஷங்கள்பிறக்கும்போது காணுநீகுறிசொல்வோம்கருதிப்பாரு, தோணப்பாவுண்ணுக்குவிதழ்வறண்டு சுகமானதாதுவினைவகருக்குமாகில், வீணப்பாதினமூன்றில்மரணமாகு மேலானவன்னிக்குத்தோஷமென்பார், ஊணப்பாவற்றிநின்றபித்தத்தோர்க்கு வுடம்புபருத்தூதிறைவுரையைக்கேளே. உசா

தூலநிதானம் இளைத்ததேகம் சிவகளே.

கேளப்பாமதியாறிற்சாவுண்டாகுங்கேடிலேயத்தாலிளைத்ததேகமானல், நாளப்பாதிங்களொன்றிற்சாவார்சாவார்நலமானசிவகநாணுட்டக்கேளு, வேளப்பாநாளேறிநடந்துதானல் மேன்மையுடன்சிவகளைவிடுபடாது, தாளப்பாகீழ்நோக்கிநடந்துதானல் தவறுவருஞ்சிவகளைநாடிதானே. உஎ

அசாத்தியநாடிமரணக்குறி.

தானென்றநாடிகீழே தாண்டியேவாங்குமாகில்
தானென்றவுயிர்தான்மாளுஞ் சாதகமின்னங்கேளு
தானென்றமூன்றுநாடிதன்வசங்குறைந்துபின்னும்
தானென்றதிடங்கொண்டாலுஞ்சாவதுதிண்ணமாமே. உஅ

ஆமப்பாவாதபித்தந்தாண்மையையறிந்துகொண்டு
நாமப்பாமருந்துசெய்யநலமுறுதோஷந்தீரும்
வேமப்பாபித்தம்போனல்வெம்பிடுமுயிர்தான்காணும்
பூமப்பாவாதநிற்கில்பொன்றிடான்மருந்துநல்கே. உகூ

நல்கியமருந்துநாடிநரம்பெலாங்குதித்துப்பொங்கில்
இல்கியமேலின்மேலேயெறிந்துதானேடுமாகில்
மல்கியமரணமில்லைமறைந்ததுகீழேநாடில்
உல்கியவுயிருக்கீனமுற்றறிந்துகொள்ளே. ௩௰

அறிந்திடாவுந்திக்கீழேயமளியாய்க்குதிக்குமாகில்
எறிந்திடாவுயிரையுண்ணுமெய்யுமாந்தோஷமப்பா
செறிந்திடாதுந்திதானுஞ்சேரிடம்வாய்வுக்கப்பா
மறிந்திடாத்தசநாடிக்குமகத்தானபீடம்பாரே. ௩க

வாய்நீர்க்குறி.

பாரப்பாநோயுள்ளோர்கள் பக்குவம்பார்த்துநீயும்
வாரப்பாவுமிழ்ந்திட்டாக்கால்மைந்தனே தூரப்போகில்
கூரப்பா தாக்கிற்றுனுற்சாவில்லைசாகான்கேளு
சாரப்பாகிட்டவீழிற்சாவதுசடுதிதானே. ௩௨

காணப்பாமுறைப்பாடெல்லாங்காண்பதுமந்தத்தாலே
பூணப்பாமந்தமானுற்புகுந்திடும்வாய்வுதானும்
வாணப்பாநோய்கட்கெல்லாம்வாயுவால்வளரும்பாரு
மூணப்பாவப்புவன்னிமுத்தோஷமூன்றாம்பாரே. ௩௩

மந்தம்.

பாரப்பாமந்தமுண்டாம் பரிசனமுரைக்கக்கேளு
காரப்பாமிகுந்துமேலேகபளிக்குமன்னத்தாலே
வாரப்பாவிறைச்சியானுமாப்பண்டத்தானுந்தானும்
சேரப்பாமேதிப்பாலாற்சேர்ந்திடுமேகந்தானே. ௩௪

கானென்றவன்னத்தாலேதலைப்படவுடம்பிதப்பா
தானென்றஅன்னமப்பா தனிபழிகொள்ளுமீறில்
தானென்றவன்னமெல்லாஞ்சகலவித்தாகும்பாரு
தானென்றவிதத்துக்கெல்லாந்தத்துவமுரைக்கக்கேளே. ௩௫

பகை.

கேளப்பாவெட்டைபித்தங்கெடியானவாதம்வாய்வு
வாளப்பாவையஞ்சீதம்வளர்ந்திடுமன்னத்தாலே
பாளப்பாவன்னந்தானும்பகையுடன்பழியுங்கொள்ளும்
வேளப்பாஅன்னத்தாலேமேகங்கள்பிறப்பைக்கேளே. ௩௬

மேகவுற்பத்தி.

மேகங்கள்பிறந்துநின்றவிதங்களைவிளம்பக்கேளு
ஆகங்களிகழ்ந்தபோது அப்பனே தினமுஞ்சென்று
போகங்கள்செய்யும்போதும்புகழ்மந்தங்கூட்டும்போது
பாகங்கள்பசியனூடும்பருகுஞ்சையோகந்தானே. ௩௭

சையோகஞ்செய்யும்போதுந்தனிநின்றகழியேயோடு
மையவோவமுர்தந்தன்னையடக்கியேயனல்தான்கொள்ளு
மெய்யடாவிந்துகாணில்விழவிழப்புண்ணுந்தானு
மையடாமேகத்தாலேவளர்ந்ததுகிரந்திபாரே. ௩௮

கிரந்தி.

கிரந்தியால்விரணமுண்டாங்கெடியதிகிழமேக
முரந்தியவிரண்டினாலேயுலைவாய்வுச்சூலைகாணும்
பரந்தியமூன்றினாலேபலபலமேகங்காணும்
துரந்தியலிங்கத்தாலேதொல்லைநோயெய்துங்காணே. ௩௯

தொல்லையாஞ்சுரத்தினாலுஞ்சூழ்கின்றவாயுவாலு
மல்லையேசெய்யுமாகிலன்னத்தைக்காட்டிடாதே
வல்லையவன்னிராசன்வழியதுசெவ்வையானால்
தொல்லையேதில்லையப்பாசூழ்நோயும்வாய்வுத்தானே. ௪௰

வாய்வுருத்திரரோகம்.

வாயுவேமிகுந்துதானால்மைந்தனேமேல்மூச்சேறும்
வாயுவேமிகுந்துதானால்மலர்ந்திடும்விரணமெல்லாம்
வாயுவேமிகுந்துதானால்மலசலமிரண்டுங்கட்டும்
வாயுவினாலேயப்பாவளருத்திரரோகமாமே. ௪௧

ஆமப்பாருத்திரரோகத்தாண்மையையுரைக்கக்கேளு
வேமப்பாவெம்பிப்பாய்ந்துமிகநெஞ்சிக்குத்துண்டாகிப்
போமப்பாபித்தந்தன்னைதப்பியேபோகொட்டாமல்
பாமப்பாபேசும்போதுபதையாமற்சாவார்தாமே. ௪௨

சுகசன்னி.

வேறு.

பதையாமற்சாகின்றசுகசன்னிமார்க்கம் பாய்கின்றவிதங்கேளு பண்பாய்நீயும், சிதையாதவெண்ணெயுடன்றீர்த்தமாடி நிரம்பவே தயிர்கூட்டிபொசித்துபின்னும், குதையாதமந்தமுடன்புணர்ச்சிகூடிக் கூடியேவாய்வுதான்காலத்தேறி, அசையாதநோயுக்கும்போக்குஞ்செய்யு மப்பனேசத்தியொடுசன்னியாமே. ௪௩

வேறு.

சன்னிதான்தோன்றும்போதுசடமெலாம்வேர்வைகாணும்
சன்னிதான்சுகத்தால்மைந்தாகண்கள்தான்சிவப்பேயாகும்
வன்னிதான்காற்றுலையால்மகத்தானதோஷமாகு
மன்னிதான்சுகத்திலன்னமழிந்திடுங்காயந்தானே. ௪௪

மூலரோகம்.

காயத்தில்மூலரோகங்கண்டிடும்விதங்கள்கேளாய்
ராயொத்தபசியில்லாமற்பட்சிக்கிலடக்கில்வாய்வு
மாயத்தாலிருத்திக்கொண்டுமலமதையடைக்கும்போது
ஓயத்தகுண்டலிக்குளுட்புகும்வாய்வுகாணே. ௪௫

அபானன்மூலவகைவிபரம்.

காணப்பாவாயுவானுங்கனத்தவபானன்றன்னைப்
பூணப்பாமலத்தைக்கட்டிப்புகையெழக்கருக்கிறானும்
தோணப்பாமுளையைப்போலச்சுருக்கிமுன்மலந்தான்வீழில்
ஆணப்பாவபானன்றன்னையமுந்தவேயிறுக்கும்பாரே. ௪௬

மூலவியாதிசெய்யுங்குணம்.

இறுகியமூலமொன்றுவெழுமண்டலமூலமொன்று
வறுக்கியேபுண்ணுய்ச்சீய்தான்வடிகின்றமூலமொன்று
உறுக்கியவாயுவாலேயுதிரந்தான்கட்டிநின்று
தறுக்கியேகிறிச்சினங்கள்தானந்தமூலமாமே. ௪௭

மூலந்தானெழுந்தபோதுமூலத்திற்கனல்தான்மாறு
மூலமேயெழுந்தபோதுமுளைவந்துநாசமாகும்
மூலமேயெழுந்தபோதுமுழங்கவேயிரைச்சலாகும்
மூலமேயெழுந்தபோதுமுசிவில்லாகழிச்சலாமே. ௪௮

பித்தமேகம்; வேறு.

கழிச்சலென்றகிராணியிலேவிதமாறப்பா
கண்டபித்தமனல்வாதம்வாய்வுதானும்
அழிச்சலென்றவையமுடன்மூன்றுகூடி
யப்பனேமனம்பேதிக்கும்பிலந்தான்போக்கும்
தெழிச்சலென்றவாய்வுதான்மேகபேதி
திறமானமூலத்தின்தோஷபேதி
பழிச்சலென்றசங்காரணபேதியொன்றும்
பாரப்பாவாயுவென்றுமாறுமாச்சே. ௪௯

வாதமேகம்.

ஆச்சப்பாமேகங்கேளுவப்பனேபயித்தியரோகம்
நீச்சப்பாமேகந்தன்னைநிசஞ்சொன்னேன்காணுகாணு
காச்சப்பாமஞ்சள்போலக்கவிணமூந்தன்னைக்கண்டால்
வீச்சப்பாபித்தமேகம்விளம்பினர்விரும்பிக்காணே. ௫0

### சேத்துமமேகம்.

விரும்பியசீலைதாதும்வெளுத்திடில்வாதமேகம்
மரும்பியவுஷ்ணந்தானுமயிலதனிறமேயானாற்
றிரும்பியவையத்தாலேசேர்ந்திடுமேகமாகும்
சுரும்பியமூன்றுலப்பாதோன்றிடுங்குணங்கள்கேளே. ௫௧

### பித்தவாய்வுமேகத்திற்சேர்ந்தால்.

கேளப்பாபித்தவாய்வுகெடியுடன்சேருமாகில்
தாளப்பாஞானமானதமரிலேயெரித்துவேகும்
வீளப்பாநீரைக்கட்டும்விழும்பொசிந்துளியுமாறும்
பாளப்பாசிலநேரங்கள்பனிச்செனவிறங்குந்தானே. ௫௨

### வெள்ளைமிகுதியானால் இலட்சணம்.

தானென்றவாய்வொதுங்கினால்தண்டிலேநோவுதானும்
வாவென்றமந்தத்தாலேவாயுவிற்புகுந்தேசாடும்
கானென்றவெரிச்சல்காணும்கல்லடைப்பாகும்பின்னை
மானென்றவாதவாய்வுமருவிடில்வெள்ளைகாணே. ௫௩

### வாய்வுவொதுங்கினால்.

வெள்ளைதான்மெத்தவீழில்மேனியும்பொருமிக்காணும்
கள்ளமேசரீரமெல்லாங்கறுப்புடனரம்புமோடும்
தள்ளவேதாதுநட்டந்தேகமுமிகுதியுண்டாம்
உள்ளதுசொன்னோநாமுமுற்றுணர்ந்தறிந்துகொள்ளே. ௫௪

### சேத்துமவாய்வுநீரிழிவு.

அறிந்திடவாய்வுவோடேவையம்வந்தெய்துமாகில்
பிரிந்துநீர்பொசிந்திடாதுபிறவெள்ளைவிழுந்திடாது
எரிந்திடுமத்திபோலவிளைப்புடனிருமலுண்டாம்
மரிந்திடுந்தகைச்சல்காணும்வலிபெழுமேகமாமே. ௫௫

### இருபத்தொருமேகத்திற்குவிபரம்.

வலித்திடும்வாதந்தானும்வள்ளையபித்தந்தானும்
ஒலித்திடுமகத்தாமேகமொழிகிடுஞ்சலந்தான்மாறிச்
சலித்திடுந்தாகமீறுஞ்சாப்பிட்டாலுடனேகாந்தும்
தலித்திடுமூன்றினோடேமுங்கிவாயினிக்கும்பாரே. ௫௬

இனித்திடும்வாதமேகத்தியல்புநல்லெண்ணைபோலும்
பனித்திடுங்கள்ளுப்போலும்பதிநீர்போல்நீர்தானோடும்

கனித்திடுமேனியெல்லாங்கனத்திடும்வெளுத்துப்போகும்
தனித்திடுமேகந்தானும்சாற்றியவையந்தானே. ௫௭

மகோதரம் பெரும்பாடு.

ஐயமும்பித்தந்தானுமணைந்திடுங்காலந்தன்னிற்
கொய்யுறுமிரத்தந்தானுங்கொப்பளித்தோடுந்தண்டிடல்
மையுறுகண்ணினார்க்குமகோதரம்பெரும்பாடாகுந்
தொய்யுறுமேகமுண்டாந்தொடர்ச்சியைமுறையாய்க்கேளே. ௫௮

முறைகேளுமொன்பதப்பாமுயற்சியால்வந்தமேகம்
துறைகேளுகற்பத்தானுஞ்சூழ்கின்றமேகமொன்று
நறைமூத்தகூந்தனல்லாய்நாயகன்மேகத்தானு
மறைபோற்றுங்கெர்ப்பத்தானும்வளர்ந்திடுமேகந்தானே. ௫௯

வளர்ந்திடுங்கெர்ப்பத்தானுமருவியமேகமைந்து
முளிர்ந்திடும்பதனியாகுமுள்ளத்தின்மேகந்தானும்
வளர்ந்திடும்வெள்ளைகாட்டுமாகாதசுரமேகந்தான்
தளர்ந்திடும்மதியுமீறித்தளரெலும்புருக்கியாமே. ௬௰

தணல்போலக்காயுமேகந்தண்ணீர்தான்பகையாமேக
முணக்கவேமுழுக்குமேறிமுறுகுமாமேகந்தானும்
பிணக்கவேபசிதான்கெட்டபேரெழுமேகந்தானும்
வணக்காதசையோகத்தைவர்ச்சிக்குமேகமாமே. ௬௧

ஆமப்பாவுஷ்ணத்துண்டாமாகியேமேகம்பின்னும்
ஓமப்பாபாஷாணத்தானுற்றிடுஞ்சிலமேகங்கள்
நாமப்பாசொன்னேமிந்தநாடியாஞ்சூத்திரந்தன்னில்
ஓமப்பாவதுதானேமூமைந்துமூன்றென்பதாமே. ௬௨

ஆகியமேகந்தானுமப்பனேயிருபத்தொன்று
மேகியகுன்மந்தானுமெழுந்ததோர்விதங்கள்சொல்வோம்
பாகியபித்தத்தோடும்வாதமும்பரிந்துசேரில்
வாகியவன்னநீரும்வாந்தியுமாகும்பாரே. ௬௩

பாரப்பாவாயுவாதம்பரிவுடனபானன்றங்கில்
ஓரப்பாநாபிதன்னிலுருண்டுதான்மிகவேநோகும்
கோரப்பாநெஞ்சிற்குத்துங்குடலையுமுறுக்கிக்கொண்டு
வாரப்பாவலிக்குமெத்தவாதமாய்வழங்கும்வாய்வே. ௬௪

வழங்கியவப்புவோடுவாதமுமொன்றேயானால்
தழங்கியவன்னசாரஞ்சங்கிக்கவொட்டாதப்பா

புழுங்கியநீதானப்பாபிடியன்னமேறிக்குத்து
முழுங்கியமுறுக்குமேறியுயிரையும்வதைக்குங்காணே. ௬௫

## சூலைகுன்மம்.

வதையுறுவாயுவோடுமேகமுமருவுமாகில்
பதையுறுமலசலங்கள்பரிவுடன்கட்டிக்கொள்ளு
மதையுறுமிடதுபக்கமைந்தனேவலதுபக்கம்
பிதையுறமுறுக்கிக்குத்தும்பெருஞ்சூலைகுன்மமாமே. ௬௬

குன்மமோரிதுதானுலிற்கூறிலெண்விதமாம்பாரு
வன்மமாநோய்கட்கெல்லாமகாநோய்தான்பொல்லாதாகும்
கன்மமாஞ்சடத்துக்கெல்லாங்காணுங்காணிந்தரோகம்
நன்மையாமாந்தருக்குநடந்தாலுநாடிடாதே. ௬௭

## பித்தசூலை.

நாட்டியபித்தசூலைநடத்தியவுரையைக்கேளு
ஊட்டமாயன்னமுண்ணருசிதப்பிவாந்தியாகு
மாட்டியகைகால்காதுவகையுந்தன்மேலுநோகும்
நீட்டியவங்கங்கேதானின்றெரிந்தூருங்காணே. ௬௮

காணப்பாவாதசூலைகாட்டிடுங்குறியைக்கேளு
கோணப்பாகைகால்சந்துகுழைச்செல்லாங்கடுத்துநோகும்
காணப்பாசுரமுங்கண்டுகனத்துடன்கரப்புமாகும்
காணப்பாதேகமெத்தக்கனத்திடுமிளையாதென்றே. ௬௯

## மார்பிற்சூலை.

இளைத்திடுமார்பிற்சூலைக்கெய்தியகுணங்கள்சொல்வோம்
குளைத்திடுங்கைகால்நெஞ்சுசுருக்குடன்வறண்டிருமும்
துளைத்திடுமார்பிற்சென்றுதாக்கிமேலேறிவெட்டு
மளைத்திடுஞ்சீய்தான்கக்குமாகாதவையமாமே. ௭0

ஆகாதவாதபித்தமளைந்திடுஞ்சூலைகேளு
வாகானகால்கைகள்வளமுடன்கறடுகட்டும்
தாகானமேனியெல்லாந்தடிப்புடன்வெடிப்புண்ணாகும்
போகாதசாத்தியமாகிப்புணர்ச்சியாய்க்கொல்லுந்தானே. ௭௧

தானென்றசூலையோடுசமவாதசூலைகேளு
ஊனென்றசடந்தானேகுமுசிதப்புங்கபாலப்புண்ணும்

கானென்றகாலிலாணியெனும்பெலாங்கறுத்துக்கெட்டு
கோனென்றகழிச்சல்தாகங்குளிர்சுரஞ்சூலையாமே. ௭௨

ஆறுகுஞ்சூலையப்பாவதிலொன்றில்மூன்றுசூலை
வேறுகும்பதினெட்டாகும்வெவ்வேறுசூலையில்லை
கூறுகுமுன்னூலப்பாகுணங்கள்தான்கோடியாகும்
பாறுகுமிவர்கள்பேரைப்பிரித்துரைசெய்வோம்பாரே. ௭௩

கெர்ப்பவாய்வுகிருமிவடியும்.

பாரப்பாகெர்ப்பகாலம்பரிவுடன்வாய்வுதேய்வு
சேரப்பாவுந்தியோடுசென்றிடுங்கருத்தான்மாளும்
வாரப்பாபுழுத்தானுண்ணில்மலமெடனச்சொல்வாரப்பா
ஆரப்பாவிதனைப்போக்கிலாண்பிள்ளைசெனிக்குந்தானே. ௭௪

செனிக்கின்றகுழவிதானுந்திடனுறப்பறக்கும்போது
கனிக்கின்றசினிபோலக்கலந்துள்ளேகட்டினிற்கும்
பனிக்கின்றவிடுப்புகைகால்பரவியேநொந்துகுத்தும்
தனிக்கின்றபசிதான்போகுந்தடித்திடுமுதரம்பாரே. ௭௫

பாரியவாழ்வுதானும்பரிவுடன்குழிதான்சேரில்
தாரியகழிச்சலாகிச்சதாஙித்தமூறமிச்சாடும்
வாரியதேகமெல்லாம்வலியெழுமிடைதானேகும்
ஆரியனெனக்குச்சொன்னாராய்ந்தவர்சித்தர்தானே. ௭௬

கெர்ப்பசூலை.

தானென்றகெர்ப்பத்தோடுதெரித்திடுசோரைக்கட்டில்
வானென்றவித்துப்போலேவாயுவுமுருளும்பாரு
ஊனென்றபசிதான்போகுமுளைத்துதானிரைச்சலுண்டாம்
மானென்றகழிச்சல்மீறும்வருஞ்சூதவாயுவாமே. ௭௭

சூதானகெர்ப்பகாலஞ்சுத்திதான்மிகுந்துகொள்ளில்
வாதானமேகமீறிவழங்கியேவெறுப்பிக்குங்காண்
போதானவுடம்பதெல்லாம்புண்போலமிகவுநோவும்
தீதானமயக்கமாகினிர்ச்சீவனாகுவானே. ௭௮

கெர்ப்பசூலை.

ஆகின்றவாறுசூலைகெர்ப்பத்தில்வாழ்ந்தநோய்காண்
பாகின்றசுவைதான்சூழல்பதித்திடுங்கருவுமப்பா

வாகின்றதிறுதான்போக்கில்மலடிதான்பெறுவர்பிள்ளை
ஆகின்றநோய்கட்கெல்லாமறைந்திடுமுறைப்பாடாமே. எசு

கெர்ப்பசன்னி.

முறையானகெர்ப்பந்தன்னில்முயன்றதோர்சன்னிகேளு
உறையானசேனீர்க்குள்ளேயுறைந்திடில்வாய்வுமீறில்
இரையானதிரேகம்வேர்க்குமேலெலாமயக்கமாகும்
துறையானமலந்தான்கட்டுஞ்சோபிக்குந்துணிந்துபாரே. அ௰

பாரப்பாமாதர்க்கெல்லாம்பச்சுடம்பாகுங்காலம்
தாரப்பாவனுபவிப்பன்தனிகாடிதன்னையுண்பான்
ஆரப்பாமாங்காய்தின்பாளப்பனேமாவுந்தின்பாள்
கூரப்பாஜன்னியெய்துங்கொண்டிடுஞ்ஜன்னிகேளே. அக

கொண்டிடுமலடிக்கப்பாகூடிடுமெட்டுச்சன்னி
வண்டிதானதிர்காலத்தில்மரத்தின்பன்மோர்தானுண்பன்
தண்டியேயணைவாள்பின்னுந்தனிச்சூதக்காயுந்தின்பன்
ஒண்டியபெண்களுக்குவோரெட்டுச்சன்னியாமே. அஉ

ஓரெட்டுச்சன்னியப்பாவுற்றதுபெண்களுக்கு
வாரெட்டுப்புருஷனுக்குமகத்தானசுகஜன்னிதான்
நேரெட்டுப்பார்க்கும்போதுநெகிழ்ந்துவெவ்வேறுரும்
பாரெட்டுமெச்சவேதான்பகர்ந்திடுங்கண்ணோய்கேளே. அங

கண்ணுள்வியாதிவருங்குணம்.

கேளப்பாபொடிச்சுட்டாலுங்கிளரவேவெயில்காய்ந்தாலும்
வாளப்பாமின்னார்தம்மைமருவியேமித்தமித்தம்
காளப்பாமுழுக்கில்லாதால்கண்ணினாற்கனல்தான்பார்த்தால்
தாளப்பாபாஷாணத்தால்தானெழுங்கண்ணோய்பாரே. அச

கண்ணினோய்தானுண்டாகுங்காரணமின்னஞ்சொல்வோம்
பண்ணனமேகத்தாலும்பகர்வெட்டைவாயுவாலும்
தண்ணனவப்புவாலுந்தனிமலக்கட்டினாலும்
புண்ணனவிரணத்தாலும்போடுநற்காரத்தாலும். அரு

காரமாஞ்சாரத்தாலுங்கடிரவிதுன்பத்தாலும்
நீரமாஞ்சரக்குசுட்டநில்லயுறுபுகையினாலும்
வீரமாம்பாஷாணத்தால்விளம்பிடும்ரோகத்தாலும்
சீரமாமிவற்றாற்கண்ணிற்செனித்திடும்வியாதிதானே. அசு

## பதினெட்டுகுட்டத்திற்கும்விபரம்.

வியாதியாமூவாறுக்கும்விளங்கியகுட்டங்கேளு
சுவாதியாமேகத்தாலுஞ்சூழ்கின்றகிரந்தியாலும்
பயாதியாமாறதாகும்பலவண்டினாலேயெட்டாம்
மயாதியாம்புழுவால்நாலுமையமாம்பத்தெட்டாமே. ௮௭

ஆமப்பாநோய்கட்கெல்லாமரசுதான்மூன்றுநாடி
காமப்பால்வளர்ந்தெந்நாளுங்கருவினைக்கலந்துசேர்ந்து
வேமப்பாவெந்துநீறிவிடவெல்லாவமிழ்ந்துபின்னும்
சாமப்பாபிறக்குமந்தத்தாதுவின்விளக்கங்காணே. ௮௮

காணப்பாநாடிசொன்னேன்கலந்திடுங்கருவுஞ்சொன்னேன்
தோணப்பாநோயுஞ்சொன்னேன்சூட்சமும்வகுத்துச்சொன்னேன்
பூணப்பாவவத்தைசெய்யும்பூட்டையும்விரித்துச்சொன்னேன்
வீணப்பாசொல்லவில்லைவிதிமுறைவணங்கிப்பாரே. ௮௯

கேட்டிடுநாடிபத்தில்கெடியெழுநாடிதள்ளி
நாட்டிடுநாடிமூன்றில்நயம்பிடிமிடையேலாத
மாட்டிபின்கலைதான்பித்தமையமுஞ்சுழிதானாகும்
வாட்டிடுமலமேவாதமருவிடும்பித்தநீரே. ௯௰

பித்தத்துவையவிந்துபிரித்தனர்பூதங்கேளு
உற்றுடன்வாதம்வாய்வுவோங்கியபித்தந்தேய்வு
சுற்றற்றவையேதண்ணீர்சோர்விலாவாணன்வாதம்
பற்றற்றபிராணன்பித்தம்பகையுறுசமானனேயே. ௯௧

ஐயமேயிவர்கண்மூன்றாலழிக்கவுமாக்கலாகும்
நையுமேயொன்றில்மூன்றுநடந்திடுநல்வாநாகில்
மையறுங்கழுவுக்கெல்லாம்வாசல்காப்பவரேயாகிச்
செய்யுறுந்தொழிலுக்கெல்லாஞ்சித்துடன்சந்துமாமே. ௯௨

ஆமப்பாவெழுபத்தீராயிரநாடிபத்தாஞ்சொன்னேன்
சோமப்பாவுந்திகீழேசுழிதனைப்பற்றிநிற்கும்
காமப்பால்விளைத்தெந்நாளுங்கருவினைவளர்த்துப்பின்னும்
சாமப்பாபிறக்குமந்தத்தாதுவின்வழக்கந்தானே. ௯௩

## சுத்திவகைரசச்சுத்தி.

வளர்ந்திடுந்தாதுதன்னைவகையதில்துகையைச்சொன்னேன்
வளர்ந்திடும்வியாதிக்கெல்லாமணியொடுமருந்தைச்செப்ப

வளர்ந்திடும்சரக்கையெல்லாம்வகைவகைசுத்திகேளு
வளர்ந்திடுநோய்கட்கெல்லாமருந்திறுலொழியுங்காணே. ௬௪

வேறு.

காணப்பாசூதமொருபலந்தான்மூன்று கல்வத்தில்மத்தித்தே மஞ்சட்டூளால், தோணப்பாமத்தித்துவொட்டையின்தூளு சுகமா னவெற்றிலையின்சாறும்விட்டு, ஊணப்பாதனித்தனியேகடிகைமூன் று வுற்த்தேய்த்துத்திரும்பவதையூறப்போட்டு, பூணப்பாதாழைநீ ர்மலாக்காய்நீரும் புகழானசெம்பரத்தம்பூவின்சாறே. ௬௫

சாறுகும்வெற்றிலைச்சாற்பழுபாகற்கிழங்குந்தனித்தனியேயை ங்கோலச்சாறுங்கூட்டி, வாறுமற்சித்தில்லைப்பால்கரிப்பான்சாறும் வாயுவறுஞ்சாரணையின்சாற்றஞ்சாறும், கூறுகுங்கொன்றையிடப ட்டைச்சாறுங் கொத்தோடேமும்மூன்றுங்கடிகைமாத்தி, வாறுக விப்படியேமத்தித்தாக்கால் வாலைரசமாகுமடாமைந்தாபாரே. ௬௬

இரசம் இருபத்தைந்திற்கும் சுத்திவகை.

பாரப்பாவிருபத்துவைந்துசுத்தி பாடுகிறேன்திரிகடுகுதிரிபலை யுமிக்க, சீரப்பாமரமஞ்சள்கற்கண்டுசர்க்கரையுஞ் சீரானசம்பழமு மூந்திரிகையுடனே, பேரப்பாகும்மட்டிபொன்முசுட்டைநாரி புளி யாரைக்கொடிவேலிமணத்தக்காளி, நீரப்பாகற்றாழைவாய்விளங்க ம்கெந்த நேர்ந்தகருஞ்சீரகமுங்கோஷ்டந்தானே. ௬௭

கோஷ்டமொடுநாயுருவியிருபத்தைந்துங் கூரானநீர்கொண்டு கியாழங்கொண்டு, மாட்டமுடன்மத்தித்துகடிகைமூன்றுவப்பனே வெவ்வேறேசெய்தாயானால், ஊட்டலாங்குளிகைக்கும்விஷத்துகெ ல்லா முத்தமனேவேதையானோயுந்தீரும், பாட்டெல்லாஞ்சூதத்தா லல்லோசித்தர் பாடினூர்நூல்தோறும்பாடினூரே. ௬௮

கெந்தகசுத்தி.

பாடினதோர்கெந்திக்குச்சுத்தியென்ன பசுவினெய்யிலிட்டுரு க்கிப்பாலிற்சாய்க்க, ஆடினதோர்சுத்தியவிழ்தத்துக்காகு மப்படி யேயெழுதரமுருக்கிச்சாய்ப்பாய், நாடினதோர்மனோசிலையின்சுத்தி சொல்வோம் நறுக்குவாய்பணம்போலேநன்றாய்நீதான், மூடினதோ ர்கிளிகட்டியாட்டுநீரில் முதிரவேதோளாந்திரமெரித்துவாங்கே. ௬௯

மனோசிலைசுத்தி தாளகசுத்தி.

எரித்திடுவாயுமுந்துவெந்ததண்ணீர்விட்டு வெடுத்திடுவாய்ம னோசிலைதான்சுத்தியாச்சு, மறித்திடிலோவில்லையப்பாதுறைக்கெல்

லாமாகு மகத்தான தாளகத்தின்சுத்திகேளு, பறித்திடுவாய்பணம் போலேதாளகத்தைவெட்டி அருட்சீலைதனைமடித்துக்கிளித்தான்க ட்டி, அரித்திடுவாய்தோளாந்தரங்கோமயத்திலுமப்பனேகாடிய திலவித்திடாயே. ௱

## சாதிலிங்கசுத்தி.

அவித்திடுவாய்சுன்னநீர்பூசினிக்காய்நீரி லாவின்பாலரசம்பட் டைக்கியாழத்தாலும், அவித்திடுவாய்மூன்றுதினமூறப்போட்டுவா காரவெடுத்திடவேசுத்தியாகும், அவுத்திட்டுச்சாதிலிங்கஞ் சுத்தி கேளு வப்பனேகுப்பிவைப்பைநொறுக்கித்தட்டி, அவித்திடுவாய்ப மூச்சாற்றில்முலைப்பால்தன்னி லடைவாகவிருசாமமூறப்போடே.

## நாகசுத்தி.

ஊறவேலிங்கமதுசுத்தியாகு மூட்டுவாய்துறைக்கெல்லாமுறை த்துப்போகும், சீருகின்றநாகசுத்திதன்னைக்கேளு செப்பரியவெண் மையாம்பாலுமாகு, மீறவேமோராகுங்காடிநீராம் வேணமட்டும்கோ மயமாம்பழச்சாறுகும், வீறுணவெருக்கம்பாலிவைகள்தன்னில் வெ ந்துருக்கிச்சாய்த்திடவேசுத்தியாமே. ௱௨

## வெள்வங்கசுத்தி வெள்ளைபாஷாணசுத்தி.

சுத்தியென்றநாகமப்பாமணிகட்காகுஞ் சூதத்துக்காகுமதுநீ ற்றுக்காகுஞ், சித்தியென்றசெந்தூரமருந்துக்காகுஞ் சித்தரெல்லா ஞ்சுத்திதனைத்திறந்தாரில்லை, பத்தியுடனிருவங்கமிப்படிதானுருக் கிப் பாங்காகச்சாய்த்திடவேசுத்தியாகும், வெற்றியுறும்வெள்ளைக் குச்சுத்திசொல்வேன்வெட்டடாபணம்போலேபொடியாய்த்தானே

## எலிபாஷாணம்.

தானென்றபொடியதனைகிளிபோற்கட்டித்தனிச்சுன்னநீர்க்கு ள்ளேதோளாந்தரமாட்டு, தேனென்றவாவின்பால்சாணிப்பாலாந் திறவாமல்மூடியதையெரித்துவாங்கு, வானென்றபாஷாணநல்லசுத் தியாகு மாட்டுவாய்துறைக்கெல்லாஞ்சுத்தியாகும், தீனென்றவேலி விஷத்தின்சுத்திகேளு சிறுகீரையாவின்பால்காணிச்சாறே. ௱௪

## நாபிசுத்தி.

சாறுகளிற்றோளாந்திரமாகவாட்டித் தயவாகவெடுத்திடவேசு த்தியாகும், வேறுகுநாபிவிடசுத்திசொல்வேன் வெண்பருத்திச்சா ற்றிலிருசாமம்போட்டு, மீறுமற்கோமயத்திலிப்படியேசெய்து மீண் டுமதையேகண்டவிலைபிற்சுத்தி, மாறுமலிலைவாட்டியெடுத்துக்கொ ண்டு மைந்தனேதுறைக்கெல்லாமாட்டுமாட்டே. ௱௫

மாட்டுவாய்சீந்தியிடகியாழத்திட்டு மருவியதைத்தோளாந்தி ரமெரித்துவாங்கி, ஊட்டுவாய்கோமயத்தாற்கழுவச்சுத்தியுற்றெரு க்கம்பாலிலேயூறப்போட்டுக், கோட்டுவாய்கோப்பாலிற்கழுவச்சுத் தி குற்றமறுநாபிசுத்திகூர்ந்துகேளு, ஆட்டுகின்றவரப்பொடியின்சு த்திதன்னை யறைகிறேனன்றாகவுரைகிறேனே. ௲௬

அரப்பொடிசுத்தி.

அறைகிறேனயக்கிண்ணியொன்றுவாங்கி யப்பனேயெள்ளெ ண்ணெயதற்குள்விட்டுக், குறையாமலொருசாமம்வறுத்துநன்றாய்க் குமுறவேசாறுவிட்டுக்கழுவச்சுத்தி, முறையாகக்கருவேலின் பட் டைச்சாற்றில் முசியாமலிருசாமம்வேகவைத்து, நிறையாகக்காடியி லேகழுவிப்போட்டு நீட்டுவாயச்சுத்திநிலைத்தபோக்கே. ௲௭

அப்பிரகசுத்தி.

போக்காகவப்பிரகச்சுத்திதன்னைப் பூட்டுகிறேனப்பிரகம்படி தானொன்று, வாக்காகக்கோமயந்தான்படிதான்மூன்று வகைகண்டு சமனாகவிரவிவைத்து, வீக்குவாயிரண்டுபடிநீர்தான்வற்ற வெந்தபி ன்புசுணையுள்ளநெல்லிற்சேர்த்துத், தாக்கியேகிளிகட்டிப்புளித்த காடி தனில்விட்டுக்கசக்கிடவேகரையும்பாரே. ௲௮

தாம்பிரசுத்தி.

கரைத்தந்தக்காடியெல்லாந்தெளியவைத்துக் கலங்காமலிறுத் தப்பாலுலரவைத்து, நிரைத்தவொருசெந்தூரப்பற்பம்பண்ணு நி லைத்தெந்தநோயேனுநீறாய்ப்போகும், தரைத்துதொளிர்தாம்பிரத் தின்சுத்திகேளு சல்லிபோற்றாம்பிரத்தைநறுக்கிவாங்கி, நிறைக்திடு வாய்புளித்தமோர்காணச்சாற்றில் நீயேழுதரங்காய்ச்சித்துவைத்தி டாயே. ௲௯

காந்தசுத்தி.

துவைத்திடுவாயேழுவிசையெருக்கம்பாலிற் சொல்லுறேனல் லெண்ணெய்கோமயத்தில், சுவைத்தியாம்தாம்பிரத்தைச்சூட்டுசூட் டுசூட்சமாம்தாம்பிரசுத்தியாச்சு, நிவர்த்தியாம்லோகங்கள்பொன் னுமாகும் நேர்மையாந்துறைக்கெல்லாமாடுமாடும், துவைத்திடவே காந்தசுத்திசூட்டநீகேள் துசிப்பற்றுங்காந்தத்தைத்துண்டாய்வெ ட்டே. ௲௰

நிமிளைசுத்தி.

வெட்டியதோர்காந்தத்தில்சவ்வீரச்சாறு வெகுநாளைக்காடியு டன்புளித்தமோரில், கொட்டிடுவாய்மூன்றுதினம்வற்றவற்றக் கூட்

டடாதுறைக்கெல்லாம்லோகத்தோடும், மட்டில்லைகாயசித்தி லோக சித்தியாகு மப்பனேகிமிளைசுத்தி யறைப்பக்கேளு, வட்டியுறநால்வ கையுநொறுக்கிக்கொண்டு வாழையிடகிழங்கிநீர்வாங்குவாங்கே. ()

துத்தசுத்தி.

வாங்கியேகிமிளையிட்டுவரித்துமைந்தா வைத்திடவேசுத்தியா மயக்கமில்லை, பாங்கியாந்துத்தத்தின்சுத்திகூட்டப் பணம்போலே நொறுக்கியதைக்கிளியாய்க்கட்டி, ஆங்கியாபமூரியிலே யேழுசாம மாவினிடநீர்தனிலேரெண்டுசாமம், தேங்கியதைத்தோளாந்தர மெ ரித்துவாங்கு சித்தியாஞ்சுத்தியாம்லோகத்தூட்டே. கககஉ

குக்குலசுத்தி.

ஊட்டவுந்தான்குக்குல்தனைச்சுத்திசெய்து வுத்தமனே யிடித் ததனைக்கிளிதான்கட்டி, மூட்டுவாய்திரிபலையுந்தேவதார முதிர்ந்து நின்றபேய்ப்புடலங்கியாழஞ்செய்து, ஆட்டுவாய்தோளாந்தர நாலு சாம மதன்பிறகுருத்திரபத்திரியுங்கூடக், காட்டுவாய்மிம்பத்தோல் கியாழம்வாங்கிக் காய்ச்சவேயதினிடகளங்கம்போமே. கககங

தொட்டிசுத்தி.

களங்கம்போலாவின்பால்நாலுசாமம் காச்சிடவேசுத்தியாங்க லருஞ்சித்தி,களங்கம்போந்தொட்டிக்குச்சுத்திசொல்லிக்கட்டிதனை நொறுக்கியதைகலத்திலிட்டுக், களங்கமறநெய்தேனுஞ் சரியாய்சே ர்த்துக் கலக்கியேயூறவைப்பாயெட்டுநாள்தான், களங்கறவுந் தோ ளாந்தரங்காணச்சாற்றில் காய்ச்சடாதொட்டியங்கேசுத்தியாச்சே,

கர்ப்பூரச்சிலைசுத்தி.

ஆச்சப்பாகர்ப்பூரச்சிலையைவாங்கி யடைவாக நொறுக்கியதை க்கிளிகட்டிவைத்து, பாச்சப்பாவாவின்பால்தோளாந்தரமாகப் பா ல்வற்றுமட்டுமங்கேயெரித்துப்பின்னும், காச்சப்பாவயக்கின்னிக் குள்ளேவைத்துக் கட்டியதோர்சல்லிநீர்தன்னுலாட்டு, மூச்சப்பா சலாசத்துசுத்தியாச்சு மூட்டிடுவாய்துறைக்கெல்லாமூட்டுமூட்டே

நேர்வாளசுத்தி.

மூட்டுவாய்நேர்வாளஞ்சுத்திகேளு முழுமேநிச்சாணியிலேவா ளம்போட்டு, ஆட்டுவாய்கமலாக்கினிதீயாலப்பா வாறவிட்டெடுத்த தனைத்தோடுபோக்கி, மூட்டிவாய்குற்றமறுஞ்சுத்தியாகு முறவாகு ஞ்சாரக்கோடுவூடுபந்தாம், நீட்டியேசுத்திவகைமெத்தவுண்டு நினைவு கொண்டிவ்வளவுஞ்சொன்னேன்பாரே. கககசு

லோகமாரணம்.

பாரப்பாலோகத்தின்மாரணங்கள்சொல்வோம் பரப்பிலேவிடு காதேயடக்கியாடு, ஆரப்பாவகையாகச் சொன்னேரேது வடைவாக ச்சொல்லுகிறேனடக்கம்விட்டு, நேர்ப்பாவெள்ளியந்தாளத்தால்மா ளும் நிலையாதகாரீயமனேசிலையால்மாளும், காரப்பாவுருக்கதுவும்லி ங்கத்தால்மாளும் கடியகெந்திதாம்பிரத்தைக்கவ்வுந்தானே. ககஎ

கவ்வுமடாவெள்ளிதன்னைமாட்டியுண்ணுங் களங்கமில்லாப்பொ ன்னதனைநிமிளையுண்ணும், கவ்வுமடாலோகங்கள்தகடுதட்டிக்காட் டுவாய்தகடுக்குச்சரக்குநேராய், கவ்வவேகம்பீரச்சாறுவிட்டுக் களங்கமறவாட்டியேதகட்டிற்பூசிக், கவ்வவேசட்டிக்குள்தகட்டைவை த்துக் கவிழ்த்துமேசட்டிகொண்டுமூடுமூடே. ககஅ

காந்தசெந்தூரம்.

மூடியேசந்துவாய்சீலைசெய்து முதிரவதைக்கெசபுடமாய்ப் போ டுபோடு, நீடியதோர்லோகங்கள்வேறுவேருய் நீட்டியேபுடம்போ டவன்னமேறும், ஆடிநின்றகாந்தத்தைச்செந்தூரிக்க வறைகிறேன் சுத்திசெய்தகாந்தத்தைவாங்கி, நாடியொருசட்டிக்குள்ளேகாந்தமி ட்டு நயமாகமேற்சட்டிக்கவிழ்த்துமூடே. ககக

கவிழ்த்தியபின்குழிவெட்டிமூன்றுபத்துக்கனத்தவெறுக்குழி க்குள்ளேயடுக்கியந்த, கவிழ்த்துவைத்தசட்டிதனையெருமேல்வைத் து கட்டடாமூப்பதெருமேலேமூடிக், கவிழ்த்துவதைத்தட்டிநீயெ ரித்துவாங்குகனலாறிக்காந்தத்தைவாங்குமைந்தா, கவிழ்த்தியதோ ர்பச்சரிசிகழுவிநீரோடு கருவாழைக்கிழங்கினின்சாறுவாங்கே. ()

வாங்கப்பாஆவாரஞ்சாரிளநீர்ச்சாறு வகைநாலுஞ்சமனுகவள ர்ந்துநீயும், வாங்கடாதினமிரண்டுஆட்டுச்சாற்றால் வடிப்போலப்பி டித்ததனையாறவைத்து, வாங்கடாசட்டிக்குள்ளடையவைத்துமறு சட்டிப்பாலதனைமறைத்துமூடி, வாங்கடாசீலைசெய்துகெசபுடந்தா ன்போடு வாகாகவாறியபின்னெடுத்திடாயே, கஉக

எடுத்ததொருவில்லைதனைக்குமுறவேநீ ரிறக்கியதையாட்டியே கெஜபுடமேபோடு, எடுத்திடுவாயாறினபின்காரையோம்பட்டை யி லவங்கப்பட்டையுடனெல்லிமுள்ளி, எடுத்திடித்துயிவைசமனுய்க் கியாழம்வைத்து இயல்பாகஆடியதைச்சட்டிக்குள்ளிட்டு, விடுத்தி டவேமுன்போலச் சீலைசெய்து விதமாகமுன்போலப் புடத்தைப் போடே. கஉஉ

புடம்போடுவிப்படிதானுலுவாட்டி பேரானபழச்சாற்றால் மூன்றுவாட்டி, புடம்போடுபெருத்தியிலைச்சாற்றினாலும் பிசகாமலால் விழுதின்சாற்றினாலும், புடம்போடுமூன்றுதினமப்பார்க்கேளு பிறகு நீநெல்லிமுள்ளிச்சாற்றாலாட்டி, புடம்போடுவோர்தினந்தான்சிவந்துபோகும் பேரானகாந்தசித்திறந்தானன்றே. ௧௨௩

மேலாகசெந்தூரம்.

நன்றாகலோகசெந்தூரஞ்சொல்வோம் நட்பாகலோகமுமோர்பலந்தான்மூன்று, குன்றாதகூதமொருபலந்தான்வாங்கு கொடுங்கெந்தியிரண்டுபலந்தூக்குதூக்கு, ஒன்றாகச்சூதமுடன்கெந்திரண்டு உறவாட்டுக்கல்வத்தில்கடிகைரண்டு, ஆண்டாகவிளகியதாமயனமாகுந் தூளானலோகத்தைய்தனிற்சேரே. ௧௨௪

சேர்த்தங்கேகுமரிச்சார் விட்டுநீயுஞ் சிதறாமலிருசாமமாட்டி வாங்கி, சேர்த்தங்கேயுண்டைபண்ணியாமணக்கிலையில் திடமாகவைத்தந்தவிலையால்மூட்டி, சேர்த்ததனைரவியில்வைப்பாய்கடிகையீராறு சென்றபின்றீச்சுட்டாற்போலேசூடாம், சேர்த்துநெல்லிற்புதைத்திடுவாய்தினந்தான்மூன்று திரும்பவதைத்தூளாட்டிச்சிறக்கவாங்கே. ௧௨௫

வாங்கினதோர்செந்தூரம்தங்கம்போலா மாரணத்திற்செந்தூரமாகிற்றப்பா, பாங்காகக்காந்தங்கள்லோகம்வெள்ளி பரிவானதாம்பிரங்கள்கஞ்சந்தங்கம், தாங்கினின்றமாரணத்திற்செந்தூரஞ்சித்திதாரணியில்வாய்திறந்துசாற்றவேண்டாம், தேங்காதமாரணத்திற்சித்தியாகுஞ் செய்யடாதுறைக்கெல்லாந்தெளிந்துநாமே. ௧௨௬

அப்பிரேகசெந்தூரம்.

தெளிவானவப்பிரேகசெந்தூரஞ்சொல்வேன் சேர்வாங்குவப்பிரேகஞ்சுத்திசெய்து, வளியாகுஞ்செம்பொனெரிஞ்சிச்சாற்றிலாட்டிமைந்தனேசட்டிக்குளடைபோலப்பி, தெளியாமலப்பிரேகமதன்மேலேவைத்து நேராகவடையதனைமேலும்வைத்து, அளியாகச்சட்டிகொண்டுகவிழ்த்துமூடி யப்பனேகெஜபுடந்தான்போடுபோடே.

போட்டதொருவப்பிரேகந்திரும்பவாங்கி புகழாகக்கல்லுறலிற்றாளாய்நீதான், ஆட்டியேவாங்கியதைமாந்தோலாட்டி யடைவாகவச்சாற்றாலடைதான்தட்டி, நாட்டுவாய்மாம்பட்டை தேத்தாங்கொட்டை நயமாகப்பொடியாக்கியோட்டிவிட்டு, மூட்டியடைதனையோட்டில்வைத்துமூடி முன்போலேசீலைசெய்துமூடுமூடே. ௧௨அ

மூடியேபுடந்தீர்ந்து தூளாயாட்டி முன்போலேமூன்றுதரங் கெசபுடந்தான்போடு, நீடியேகெல்லிமுள்ளிச்சாற்றாலாட்டி நீரோடுவாழையிடகிழங்குநீரும், மூடியேகலந்தாட்டியடைதான்செய்து வுறப்போடுமுன்போலேபுடத்தில்நீயும், நாடியேயிப்படிதான்கெசபுடமேபோடு நலமாகவெடுத்தவனல்வாட்டுவாட்டே. கஉசு

எடுத்திடுவாய்தூளதனைக்குமரிச்சாற்று விதமாகஆட்டியதையடைதான்செய்து, தொடுத்திடுவாய்மூன்றுபத்துபுடந்தான்முன்போல் சுகமாகவப்பிரேகமருணன்போலாம், விடுத்திடுவாய்வியாதிகளையுண்ணவென்றால்வெண்பஞ்சிற்பொறிபட்டாப்போலேபோகும், தடுத்திடவேயயத்துறைதிரையுந்தள்ளுஞ் சதுரானசகத்திரத்தெண்வியாதிபோமே. கஙய

மண்டூரசெந்தூரம்.

வியாதிபோமண்டூரசெந்தூரங்கொண்டால் மைந்தனேவைக்குகிறவரிசைகேளு, நயாதிபோய்ச்சகத்திரமாம்வருஷஞ்சென்ற நத்தங்கள்தனிற்கிடக்குங்கரியகிட்டம், மயாதிபோய்க்கொண்டுவந்து தூளாயாட்டி யப்பனேதான்றிமாக்கரியினாலே, நியாதிபோமுலையிலிட்டுச்சிவக்கவூதி நீயாவின்கோமயத்திலூறப்போடே. கஙக

ஊறியபின்னெடுத்ததனிலூரல்வாங்கு வுலர்த்தியதைதூளாக்கிக்குகையிலூட்டு, மாறியதோர்மண்டூரச்சிவப்புமாச்சு மறுத்துமதைச்செந்தூரமாகக்கேளு, வீறுடனேமூன்றுநாள்நாகவல்லிச்சாற்றில் விபரமுடன்சூட்டிடுவாய்வற்றவற்ற, வாறுகநொச்சிச்சாற்வெள்ளாட்டுப்பால்நீர் மைந்தனேமூன்றுதரங்கொதிக்கவையே. கஙஉ

வைப்பதுவுமெப்படிதானென்றுநீயும் வயணங்கேள்வெவ்வேறுதினந்தான்மூன்று, வைத்ததலைவற்றுவித்துப்பின்பீவாங்கிவரிசைபெறவொருசாமங்குமரிச்சாற்றில், வைத்தாட்டிமடக்கிவிட்டுமேலுங்கீழும் வைப்பதுதானுலிலையால்மறைத்துச்சுத்தி, வைத்திடுவாய்சீலைமண்தான்ரண்டுசெய்து வாராகபுடமறுபதுதான்போடுபோடே.

போட்டிடுவாய்மண்டூரஞ்செந்தூரமாச்சு போக்கிலேவியாதிகளைப்பிடிங்கித்தின்னும், மாட்டிடுமேமகோதரங்காமாலைபாண்டு வருஞ்சோகைபெறுவயிறுவலிமயக்கம், மாட்டியதோரீளைமுதல் மேகந்தானு மாக்கைவலிகிராணியிவையெல்லாந்தீரு, மூட்டிடுவா யனுபானமுறைக்கக்கேளு முத்தமனேவியாதிகண்டுவுறவுசேரே. கஙச

உறுக்குசெந்தூரம்.

உறவுசேருருக்கிலேசெந்தூரந்தன்னை யுரைக்கிறேனுளிப்பத்துவாங்கிவந்து, உறவாகவுலையிலிட்டு வருணன்போல வூதியதையா

வினீரில்வெள்ளாட்டுநீரில், உறவாகச்சமன்கலந்துவைத்தாயானூறு
திருமடாகருக்கதுவுந்தோய்க்கத்தோய்க்க, உறவாகவுதிர்ந்தபொடி
யெல்லாம்வாரி யுறவாட்டுக்கரிப்பானிருட்டிக்காணே. கருடு

காணப்பாவாட்டியதைவில்லிகட்டிகாயவைத்துச்சட்டிக்குளா
விலையைப்பரப்பி, பூணப்பாவில்லைதனையிலைமேலிட்டுப் புகமாகப்பி
ன்புமந்தவிலையான்மூடி, ஊணப்பாவில்லைதனைக்காயவைத்து யுறவா
கச்சீலைசெய்துவுலரவைத்து, தோணப்பாகெசபுடத்திலாட்டிவாங்
கி சொல்லுகிறேனேரிலைதாமரையின்சாறே. ௱௬௬

சாறுவிட்டுஆட்டிநீகெசபுடந்தான்போடு தளிர்க்குமரிச்சாற்றி
னாற்கெசபுடமேசெய்து, கூறுடனேவெடுத்துப்பார் முருக்கம்பூப்
போல் கொள்கியதுசெந்தூரங்கொடியசித்தி, மாறுபடாநோய்க்கெ
ல்லாந்திரிபலையும்வெல்லம் வரிசையுடன்பொடிகூட்டிவைத்துக்கொ
ண்டு, ஆறியதோர்செந்தூரம்பணந்தான்தூக்கி யப்பனேதேனிலே
குழப்பிக்கொள்ளே. ௱௬௭

கொள்ளவேதூலவுடல் சூட்சமாகுங் குறைந்நிருந்தகுஷ்டவு
டல்நெய்யிற்கொள்ள, மெள்ளவேபருத்திறுகுமயம்போலப்பா மீறி
வருநரைதிரைகள் வெருவியோடும், விள்ளவேநாவேது பாவுமேறு
மேலோர்களயங்கிட்டம்ரண்டுங்கொண்டால், அள்ளவேகுறையாது
கடலிலேற்ற மறிந்துநீலோகத்தையணைத்துஆடே. கருஅ

## மிருதசஞ்சீவி.

ஆடவேமிருதசஞ்சீவிசொல்வோ மப்பனேசூதமொன்று கெந்
தியொன்று, நீடவேகல்வத்திற்சாமமொன்று நீட்டிநீயாட்டையிலே
மயனமாகும், மூடவேகறுத்திருத்தியப்பிரேகபற்ப முயிரீந்தலோக
பற்பந்தாம்பிரபற்பம், நாடவேதாளகமுநாபிவங்கம் நலமானமனோ
சிலையுங்கங்குலிட்டம்பாரே. கருகூ

பாரப்பாவத்திதிப்பிலிபிறேடே பாங்கானவதிவிடையஞ்சொ
ர்ணமாடம், சீரப்பாவிதுவெல்லாம்ரச்கெந்தியுடனே சேர்சமனாயிஞ்
சிச்சார்சிவதைச்சாறும், வாரப்பாசிறுகீரையிவைகடன்னில் நாட்டி
யேமாட்டிசிவாய்தினந்தானென்று, பேரப்பாகஞ்சாவின்சாற்றினா
லும் பொருந்தவேதினமொன்றுபுரட்டியாட்டே. கசய

ஆட்டடாபழச்சாற்றிலாரைச்சாற்றி லப்பனே யாறவைத்துக்
குப்பிக்கேற்றி, மூட்டடாசீலைசெய்துதாளிக்குள்ளே முதிரவேமணல்
விட்டுக்குப்பிவைத்து, நீட்டடாமேலுமந்தமணல்பரப்பி நினைவாக
விருசாமமெரித்துவாங்கு, மீட்டடாவாதியபின்றாளாயாட்டி மே
லானமாத்திரைதான்செய்யக்கேளே. ௱சக

கேளப்பாயிஞ்சிநீர் தன்னுலாட்டிக் கிருபையுடன்குன்றியிடை-குகைதான்கட்டி, கூளப்பாதோஷமுதற்சன்னிக்கெல்லாஞ் சூட்டிடவேதுஞ்சிகின்ற வுயிர்கள்மீளும், காளப்பாசூசிகாபரணஞ்சொல்வோம் நாடியுயர்பதிமூன்றுசன்னிதீரும், வாளப்பாசூதமொன்று காந்தமொன்று வாகான தாம்ரமயம்லோகந்தானே. கசஉ

லோகமுடனப்பிரேகமாறுநேராய் நொறுக்கியதைநேர்சமனாய்க்கெந்திகூட்டி, லோகமுறுநொச்சிவேர்சித்திரமூலம் நாணுக்கமுடன்சரியாகக்கியாழம்வைத்து, லோகமுறும்பொடியிட்டு தினந்தான் மூன்று நோகவதையாட்டிநீவாங்கிப்பின்பு, லோகமுறுநாயுருவிகரிப்பான்மத்தை நோயகலப்பேயத்திகாளிகாணே. கசங

காணப்பாசித்திரப்பாலாடைகோட்டான் கரந்தையொடுவெள்ளைக்காக்கணமுமிக்க, பூணப்பாகாயாதபமுபாகல்தாழை புகழ்சீந்திச்சாரணையும்பேய்ச்சுரைகளெல்லாம், தோணப்பா பேய்துளசியிலைநீர்வாங்கித் தோய்த்தந்தநீர்கவறாவியில்வைப்பாய், நாணப்பாதினமொன்றுசாரதொன்று நயமாகவிரவியதை ரவியிற்போடே.

போட்டபின்புபாவங்களின்னங்கேளு புகழ்கோழி முன்மஞ்ஞைபன்றிவெள்ளா, டேட்டதனின்பித்துகளிலேழுவாட்டியூறவைத்துநிப்பிலியின்கியாழத்தாலும், மூட்டவதை மூன்றுநாள்பாவனைதான் செய்துமுசியவரையெழுசிலைவேர்கியாழத்தாலும், மாட்டவதைபாவனைதான்செய்துமைந்தா வதிற்சமனாய்நாபிதனைச்சமன்றான்சேரே.

சேர்ந்ததொருசூரணத்தைமுன்சொன்னபித்திற்றிரும்பவுநீயூறவைத்தெடுத்துக்கொண்டு,சேர்த்திடுவாயனுபானநோய்கள்சன்னி சேவல்கண்டுமுறையுடனேசெய்துநீயும், சேர்த்திடவேயறுசிலை பெருவயிறுகுன்மந் நீராதபாண்டுவுடன்வலிதான்குட்டம், சேர்த்திடநஞ்சயமுமிகுவாதந்தானுஞ் செல்லாதவீக்கமுடன் வரட்சிபோமே.

## இரசபூபதி.

வறட்சிபோம்வெட்டைபோம்வலிக்குந்திரோகம்மைந்தனேசஞ்சிமகத்தாஞ்சித்தி, இறைச்சியொடுநரம்பெல்லாமமிர்தமூறுமிரசமென்றபூபதியையியம்பக்கேளு, வரட்சிபோமிரசபற்பந்தாம்பிரபற்பம் வாங்காதநாபியிவைநேர்தான்றாக்கி, குறைச்சிடாக்கிரந்திரண்டுதிரிகடுகுபலையுங் கூருகவிவையெல்லாநொறுக்கிடாயே. கசஎ

நொறுக்கியபின்றருதாழைகண்டங்காலி நொச்சியடா பேய்த்தும்மட்டியிவைகளெல்லாம்,நறுக்கியதோர்கொடிவேலிதின்னுப்பா

ஊ நாட்டாகியபாழுமிடவோங்கிமைந்தா,சிறுக்கடாயிருபதுநாளா
ட்டிவாங்கி, சிரானவுளுந்திடைக்குக்குளிகைகட்டி, சுறுக்கானசன்
னிக்குவீந்தாயானுல் தொட்டவுடன்பதின்மூன்றுந் துகள்மீராமே.

பஞ்சவத்தியிரதம்.

நீறுமென்றபஞ்சவத்தி யிரதஞ்சொல்வே னெருப்பானகாலா
க்கினிருத்திரனைச்சொல்வேன், ஏறுமென்றநாபிகெந்திவெண்காரஞ்
சூத மியல்பானமிளகுடனே யிடையுந்தாராய், மாறுகின்ற மத்தஞ்
சாறதுகொண்டாட்டு வகையாகத்தினமொன்றுவழித்துருட்டி, ஆ
தியெயுலர்ந்தபின்புதூளாயாட்டு யப்பனே செப்பிலே யடைத்து
வையே. கசகூ

காலாக்கினிருத்திரன்.

அடைத்ததொருபொடிகுன்றியிடைதான்றாக்கி யாகாதசன்
னிக்குவளித்தாயாளுல், உடைத்திடுமேபனிரண்டுசன்னிபின்புமோ
ர்சன்னிவிரோதசன்னியொன்றுகூட, துடைத்திடுமே தோஷங்கள்
பலவுந்தீருந் துரிதானகாலாக்கினிருத்திரன்கேளு, படைத்தசத்தி
சாரமேவட்சாரந்தானும் பாங்கானநவச்சாரமிந்துப்பூவே. கரு0

இந்துவொடுபொட்டுலுப்புவளையலுப்புமியல்பானகாச்சுப்புக
ல்லுப்பாதி, மைந்தனேசரிகூட்டிகல்வத்திட்டுவாட்டியதிலோரிடை
தான்சூதம்விட்டு, தொந்தமுறவோர்தினந்தான் மத்தித்துவாங்கிச்
சூட்டவேமேல்மருந்தைத்துறையாய்நீயும், சிந்துவே பெருங்காயங்
கடுகரத்தைச் சிலேபுங்கம்வித்துமிடைநேராயாட்டே. கருக

ஆட்டியதோர்மருந்துக்குள்சூதம்விட்டு அப்பனேமூடியதைத்
தோளாந்தரமாக, ஊட்டுவாய்பழங்காடிபாண்டத்தில்விட்டு வுறவா
கத்தினமொன்றுவரைத்துவாங்கு, மாட்டுவாய்மத்தஞ்சார் நொச்சி
சாறு வாகானகரிப்பான்சார்மணத்தக்காளி, கூட்டுபொன்முசுட்
டைகொடிவேலியஞ்சி குறுகவெள்ளைக்கணங்காட்டான் காந்தைச்
சாறே. கருஉ

சாறுகளிலொவ்வொருநாளாட்டிவாங்கு தனித்துவினிப்பாவ
னைக்குத்தூளாயாட்டி, வீறுபுகழ்மிளகதற்குநேராயாட்டி விரயதை
மயிற்பித்துவராகப்பித்து, மீறிவளர்மீன்பித்து வெள்ளாட்டின்பித்
து வெவ்வேறேதினமொன்றுவிரவிவைநீ, ஊறியபின் னிரண்டுகுன்
றிவெல்லந்தேனி லூட்டடாதயிருஞ்சோறுண்ணச்சொல்லே. கருங

உண்ணையிலேவெட்டைவந்துமேவிற்ருனு லுடன்றலையிற்குளி
ர்ந்தாலமுறவாநீயு, முண்ணையிலேசன்னிபோந்தோஷம்போகுமுயி

ர்ப்பறியட்டகுன்மங்கவுசிபோகு, முண்ணையிலேபெருவயிறு பாண்டுமோடு மோகோகோகிறிச்சினங்களாறுமோடு, முண்ணையிலே சாரமுறுங்காரமூறு முத்தமனேவேதுவகையுரைக்கிறேனே. ௧௫௪

சன்னிவாதக்கியாழம்.

உரைக்கிறேன்சன்னிவாதங்கியாழத்தை யுத்தமனே சூதமொன்றுகெந்தியொன்று,நிரைக்கிறதோரரிதாரநாபிமோட்சிநேரானபொன்மாட்சிதாம்பிரபற்பந்தானும், தரைக்குயர்ந்தவப்பிரேகஞ் சத்தியவாச்சாரஞ் சங்குமுடிதாரமெவாச்சாரந்தானும், பெரைக்குபருங்கடகசிங்கிபெருங்காயம்வசம்பு பேய்ப்புடலும்பொன்முசுட்டை கடுக்காய்சுக்கே. ௧௫௫

சுக்குடனேகஞ்சாவும்நிலப்பனையின்மூலந் துஞ்சாதயிம்பத்தின்பிசினிநேராய், பக்குவஞ்சேருத்தமாதாளிச்சாற்றால் பழச்சாற்றுற்றினமிரண்டுவெவ்வேறாக, உக்கிரமாயாட்டியேகடலைபோலே உருட்டியேதசமூலக்கியாழந்தன்னில், தக்கதோரிஞ்சிச்சாறிவற்றிலூட்டு சாந்தம்வரும்வியாதியுடவகையைக்கேளே. ௧௫௬

வடவனல்ரசம்.

வியாதியெனும்பதின்மூன்றுசன்னிதானும் விக்கலுறும்வாந்தியொடுவெட்டைதானும், வியாதியெனுங்கரப்பன் முதற்புண்கள்தீரு மேலானவடவானல்ரசத்தைக்கேளு, வியாதிபோஞ்சூதமொன்றுகெந்தியொன்று மேலானவப்பிரேகந்தாம்பிரபற்பம், வியாதிபோங்காந்தமாங்கெந்தந்தாரம் வீறானநீலாஞ்சனமுந்தூக்கே. ௧௫௭

தூக்கடாகடல்நுரையுமிவைதானாய்த் துடியானஇந்துப்புபொட்டிலுப்பு, தூக்கடாவெடியுப்புகாச்சுப்புந்தானுஞ் சுகமானஅட்டுலுப்பு வைந்துநேராய், தூக்கடாசதுரக்கள்ளிப்பால்லோர்நாள் துரிசாகஆட்டியதைக்குகையிலிட்டு, தூக்கியேகுழிக்குள்ளேகுகையைவைத்துச் சோர்வின்றிவாய்மூடி வெருவடுக்கே. ௧௫௮

அடுக்குவதுகுழிகிமூமேலுமப்பா வப்படியேகனல்புடமாயோர்நாள்மட்டு, மெடுத்திடுவாய்மறுநாளிற்றாளாயாட்டி யிருக்கட்டுங்குன்றியிடையிஞ்சிச்சாற்றில்,கொடுத்திடுவாய்மூன்றுதினமேற்பொடியைக்கேளு கூரானதிப்பிலியின்பொடியைத்தூவி, படுத்தினுமேதனுவாதமுகவாதசன்னி பாங்கானநடுவாதம்பாருங்காணே. ௧௫௯

பாருமப்பாதளர்வாதம்வற்றும்வாதம் பரவியின்றதுடிவாதம்விலங்குவாதம், பாருமப்பாசுழல்வாதம்பிரளிவாதம் படபடத்துமூர்ச்சிக்கும்படரானவாதம், பாருமப்பாவனுபானங்கியாழங்கேளு பா

ங்கானவாமணக்குசிற்றுமூட்டி, பாருமப்பாவேர்கொம்புவாதமடக்
கிவேரும் பட்சிக்கவிவையெல்லாம்பறக்குந்தானே. கசுய

சோற்சந்தவயிரவரசம்.

தானென்றசோற்சந்தவயிரவத்தைச்சொல்வோம் சருவவலாக
யெண்பதுவாதந்தீரும், தானென்றசூதமொன்றலோகமொன்று, தா
ளகமுந்தானொன்றுசிமிளையொன்று, தானென்றகெந்தியொன்றுநா
பியொன்று தாம்பிரபற்பமொன்றுசித்திரமூலம், தானென்றவெங்
காரம்நொச்சிவேறுஞ் சமன்சேர்த்துக்கல்வத்திற் பொடித்திடாயே.

அனுபானச்சூரணம்.

பொடித்ததனைநொச்சியிலைச்சாற்றாலாட்டிப் பொங்கமுடன்
கவதைச்சார்தன்னிலோர்நாள், மடித்தாட்டிக்குன்றியிடைகுளிகை
கட்டி மைந்தனேயிஞ்சிச்சார்பின்னுங்கேளு, படித்தரமாய்க்கியா
மப்பா திப்பிலியின்மூலம் பாங்கானசூரணத்தைப்பகருவோம்நாட்
நடித்துடைய சீந்திசக்கரையரத்தை நயமானநிம்பனிட பட்டை
பாரே. கசுஉ

பாரப்பா வாமணக்குபருப்புதானும் பருஞ்சுக்குநொச்சியிலை
தேவதாரம், நேரப்பாதூளாக்கியதற்குநோய் நிறுத்திடுவாய்சுத்தி
செய்தகுக்கில்சேர்த்து, ஆரப்பாநெய்விட்டுஆட்டிக்கொண்டு வனு
பானசாறுகளிலறிந்தூட்டு, பேரப்பாவாதத்தைப்பிடுங்கித்தின்னு
ம் புகழானவயிரவன்றன்போக்குந்தானே. கசுஙு

இதற்குமருதாங்கிரசம்.

போக்குமிகுமிருதாங்கிஷாசத்தைச்சொல்வோம்புகழானசொ
ர்னபற்பந்தாம்பிரபற்பம், போக்குமிகுஞ்சூதமிவை சரியாய்ச்சேரு
பொன்தாரமிவையிரண்டுகெந்திரண்டு, போக்குமிகுமனோசிலையுங்க
ழஞ்சுரண்டு பொடியாக்கிக்குகைமருந்தைப்புகலக்கேளு, போக்கு
மிகுவெண்காரம்பலகரையுநோய்ப் புகட்டிலதைவெள்ளாட்டுப்பா
லிலாட்டே. கசுச

ஆட்டியதைக்குகைபிடித்துப்பொடியைவிட்டு வடைவாகக்கு
கைமருந்தாலடைத்துமூடி, நாட்டியிதைச்சட்டிக்குள்ளமைந்துநீயு
ம் நன்றாகமேற்சட்டிக்கவிழ்த்துக்கட்டி, நீட்டியேசீலைசெய்துகெச
புடத்திற்போடு நெருப்பாறியெடுத்ததனைதூளாயாட்டி, மூட்டுவா
ய்மிளகப்பாமூவாறென்றுமுன்பொடியைநெய்யிலேகுழப்பிடாயே

குழப்பியதில்நாலுமன்றியவடைபொடிதான்சேர்த்துக் கொடுத்
திடவேமூன்றுதினங்கூறக்கேளு, அளப்பிலேநோயறிந்துநடப்பிலூர

ட்டு வப்பனேசிலேத்துமங்கடொண்ணூற்றுறும், களப்பெலிபோற் பறந்தோடுமதிகசித்தி காட்டுமுன்னேயெட்டுவகை மாந்தநீங்கும், தொழப்பெரியசஞ்சீவியிதற்கொப்பில்லை சொல்லுகிறேன்தாளேசுரரசத்தைக்கேளே. கசுசு

தாளேசுரரசம்.

கேளப்பாசூதமொன்றுதாரமொன்றுகெடியானகெந்தியொன்றுமனேசிலைதான்ரெட்டி, நீளப்பாதாம்பிரபற்பமதற்குரெட்டி நிசமாகக்கல்வத்தில்நொச்சிச்சாறு,நாளப்பாரண்டுதினமிராப்பகலாயாட்டி நற்குன்றியிடையுருட்டிவைத்துக்கொண்டு, சூளப்பாதிரிபலையுமிளகுநேராய்ச் சூரணித்துத்தேனிலொருவுண்டையூட்டே. கசுஎ

மகாமோகரசம்.

ஊட்டவேயுளமாந்தைகழிச்சல்தீரு முயர்ந்துவருமெலும்பிருக்கிச்சுரமாந்தைநிற்கும், மேட்டியுறுமகாமேகரசத்தைச்சொல்வோமேலானபலகறையின்பொடியுமுன்னே, மாட்டியேசுத்திசெய்த மண்டூகநேராய் மைந்தனேயாவினெய்யில்மயனம்போலே, ஆட்டுவாய்சாமமொன்றுவுலர்த்திப்பின்பு தூளாக்கிவெற்றிலைச்சாறுமூற்றே.

ஊற்றியேபாவனைதானேழுவாட்டி யுறவுசெய்துதூளாக்கிகுன்றிதூக்கி, ஊற்றிடுவாய்காற்கழஞ்சுபசுவினெய்யி லுட்கலந்துசெய்திடவும்சயநோய்தீரும், ஊற்றியேவெண்ணெய்தேன் கியாழமாகும் உத்தமனேயுபாதிகளதிகமானல், ஊற்றுவாய்சாமத்துக்கொருக்கால்நீயு மொன்பத்துப்பத்தாறுமங்கொழிந்துபோமே. கசுகூ

ஸ்ரீவாடரசம்.

ஒழிந்திடவேஸ்ரீவாடரசத்தைக்கேளு உயிர்பறிக்கும்வாதகுன்மமொடங்கியோட, அளிந்தவிந்துமாடஷீகம்அப்பிரேகம்மவாட்சாரங்கெந்தியுடன்தாம்பிரபற்பம், பொழிந்திடநீசமனுகத்தூக்கிமைந்தா புகழ்சித்ரமூலச்சாற்கொண்டுவோர்நாள், தெளிந்துவிடாதாட்டிமஞ்சாடிபோலத் திரட்டிவைப்பாயனுபானஞ்செப்பக்கேளே.

செப்புறேன்வெற்றிலைச்சார்விட்டரைத்துத் தின்றிடவேவாதகுன்மந்தீருந்திரும், செப்புறேனனுபான்ம்வாய்விளங்கந் திறமானஇந்துப்புகாயமேலம், செப்புறேன்சவச்சனுப்புச்சரியாய்ந்தூக்கிச்சேரமாதளைச்சாற்றில்சாமமாட்டிச், செப்புறேன்கழஞ்சியிதிற்கூடக்கூட்டித் தின்றிடவேவாதகுன்மந்தெறித்துப்போமே. கஎக

சோமரோமரசம்.

போமப்பாபித்தகுன்மந்தனக்குக்கேளு பேர்சோமரோமரசப்போக்குத்தானும், ஆமப்பாசூதமொன்றுநாபியொன்று மரிதாஞ்

சரிசேர்த்து ஆட்டிநீயும், தேமப்பாதேக்கிலைப்பூசாயமூன்றுந் தெரிந்திடித்திரண்டுநாள் திறமாயாட்டித், தாமப்பாகொடிப்பைச்சார் தன்னிலோர்நாள் தனித்தாட்டிக்குகைபிலிட்டுச்சீலைசெய்யே. ௧௭௨

சீலைசெய்துகுழிக்குள்ளேமூசைவைத்துத் திறமாகக்குழிமேலேயெருவைவைத்துச், சீலைசெய்தகுகைதனக்குஆறவாரச் செய்திடுவாயிப்படியேயைந்துவாட்டி, சீலையுறாபுடம்போட்டுத்தூளாயாட்டிச் சேர்த்திடுவாய்நேர்வாளப்பருப்புநேர்தான், சீலைவடிகட்டியதிற்குன்றிதூக்கிச் சேர்ந்தாவினெய்தனிலேதின்னச்சொல்லே. ௧௭௩

இராஜசேகரரசம்.

தின்னுவிடுமிராசசேகாரசத்தைச் செப்புகிறேன்சிலேற்பனகுன்மம்போக, உன்னுகருலோகபற்பநாபிச்சூதமுற்றகெந்திவெண்காரந்திரிகடுகுதானும், தன்னுகிரிபோனுயர்ந்ததாம்பிரபற்பந் தனியேலமிலவங்கப்பத்திரிதானும், பொன்னூமத்தைவிரைசங்குபற்பந்தானும் புகழ்வில்வப்பழச்சதையுஞ்சரியாய்க்கூட்டே. ௧௭௪

கூட்டடாகஸ்தூரிமஞ்சள்தானுங் கூசாமல்மூன்றுநாள்கரிப்பான்சாற்றில், ஆட்டடாகுன்றியிடைகுளிகைகட்டியப்பனேதேனிலிடச்சயமைந்தும்போகும், மூட்டடாசுளைபோங்கிராணிபோகுமுடல்வற்றுமெலும்புருக்கிகுன்மம்போகும், வாட்டடா செறியாமையையபித்த மகத்தானகுடல்வாதமண்டவாய்வும், காட்டடாவுதரத்தில்வியாதிக்கெல்லாங் காட்டகத்திற்றீப்போலக் கருகிப்போமே.

வித்தியாதரரசம்.

கருக்கியிடும்வித்தியாதரரசத்தைத்தானும் காட்டுகிறேன்குன்மபீலிகையும்வாங்க, அருக்கிவருஞ்சூதமொன்றுகெந்தியொன்றுவப்பனேநிமிளையொன்றுதாரமொன்று, பெருக்கியநற்றாம்பிரபற்பமனேசிலையுஞ்சமனாய்ப் பொரானதிப்பிலியின்கியாழந்தன்னில், சுருக்கியேயோர்தினந்தானரைட்டிவாங்கிச் சுகமாகக்கியாழத்திற்பாவனைதான்செய்யே. ௧௭௬

பெரும்பாட்டுக்கு.

செய்ததொருமருந்ததனைப்பணத்திலேபாதி திரட்டிநீதேனிலேசெலுத்திப்பின்பு, செய்திடவேயைந்துவகைப்பீலிகையுந்தீருஞ் சீரானவாய்வுகெர்ப்பசூலைக்கெல்லாம், செய்திடுவாய்பனைவெல்லங்கியாழமிட்டுதிரிகடுகுசிறுதேக்குசமன்தானிட்டு, செய்யடாவராணிடைகியாழத்திற்றாவிச் செலுத்திடவும்பெரும்பாடுதீருங்காணே.

யோனிச்சூலை.

காணப்பாபெரும்பாடுதுண்டுதுண்டாகவிழுற்கியாழத்தில்மேற்படியைக்கழறக்கேளு, தோணப்பாவேர்க்கொம்புதேவதாரஞ் சுகமானதிப்பிலியும் புங்கம்பட்டை, பூணப்பா தூளாக்கி வராகன்றாக்கிப் புகட்டவேகுளிகையுடன் புகழ்ந்தநீயும், ஊணப்பா வலியெடுக்கும்யோனிச்சூலை யுண்டானல்வெப்பம்விரை யாமணக்குப்பருப்பே. ௧௭அ

குன்மத்துக்கு.

பருப்புடனேசரிகூட்டிமிம்பச்சாற்றிற் பதமாகக் குளிகையிட்டுயோனியிலேபூசப்,பெருப்புமுள்ளவலிதீருமுதரவலியாறுற்பேறுபடவுள்ளுக்குக்கொடுத்துவா,விருப்பமுள்ளகுன்மத்தின்குடோரிசொல்வோம் வெண்காரங்கெந்திரசநாபிதாரம், உருபோதிந்ததிரிகடுகுதிரிபலையுஞ்சமனுயுறம்போடுவைக்குநேர்வாளந்தானே. ௧௭௯

வாளமதைக்கரியாக்கியிஞ்சிசாற்றில் மாட்டுவாய்தினமொன்றுமயனம்போல, நீளவேயாட்டுநீகுன்றிபோல நினைவாகவுருட்டியேயிஞ்சிச்சாற்றில், மாளவேகுன்மங்க ளென்றுசொல்லில் மைந்தனேகொடுத்திடவேவலிகடீறும், சூளவேபாண்டுகுன்மம் பாண்டுநீங்கச்சூட்டுகிறேன்குடோரிதனைச்சூட்டுறேனே. ௧அ0

சூட்டுகிறேன்வெண்காரநாபிகெந்தி சுகமானகாந்தபற்பந்தாம்பிரபற்பம், நாட்டுபுகழ்சிரகமுந்திரிகடுகுபலையும் நற்கடுகுரோகணியுஞ்சித்திரமூலம், மாட்டுநீயெவாச்சாரஞ்சத்தியட்சாரம் மாயாதபஞ்சவுப்புவாய்விளங்கந், கூட்டுநேர்சமபாகந்தூளாயாட்டிக் குறையாமனேர்வாளம்பாதியாமே. ௧அ௧

பாதிபாம்வாளத்துக்கெட்டிவித்து பாங்காகத்தூளாக்கியெல்லாமொனருய், நீதியாய்மாதளம்பூபழச்சார்விட்டு நீட்டியேயைந்துதினமாட்டிப்பின்பு, சேதியாமேழுதினங்கரிப்பான்சாற்றில் திறமாக ஆட்டியதையுலரவைத்து, நீதியாயிஞ்சிவெல்லம் வெந்நீர்நெய்யில் நீட்டவேகுன்மமுதல்நீசாம்பாரே. ௧அ௨

சுரமாலிகை.

பாரப்பாசுரம்பாருமாறல்போகும் பாங்கானசன்னியொடுதோஷம்போகும், ஆரப்பாநோயறிந்துவனுபானஞ்சேர்த்து அளவறிந்தூட்டுவாயப்பாற்கேளு, நேரப்பாசுரமாலிகையைச்சொல்வோம் நேரானதாம்பிரபற்பஞ்சூதங்கெந்தி, சேரப்பா மனோசிலையுந் தாளகம்வெண்காரந்திரிகடுகுந்திரிபலையுஞ்சீரொன்றுமே. ௧அ௩

ஒன்றானவிதற்குரெட்டிநேர்வாளப்பருப்பு வுறச்சேர்த்தூக்கல்வத்திற்கரிப்பானீரால், ஒன்றாரவிருசாமமாட்டிவாங்கி யுத்தமனேகுன்றியிடைகுளிகைசேர்த்து, ஒன்றாகவனுபானமிஞ்சிச்சாற்றி லூட்டவேயொழியுகிறவியாதிகேளு, ஒன்றாகப்பீலிகையும்வெறுப்புப்பாவையுதரத்தில்வலிதாகமொழியுந்தானே. ௧அ௪

சம்பிரதாயச்சூரணம்.

ஒழியுமப்பாநெடுநாளேவியாதியாளு வுறச்செய்வாயவுஷதங்கள்மண்டலந்தானன்றாய், பொழியமின்றசம்பிரதாயச்சூரணத்தைக்கேளு பொங்கிவளராப்பொடியுமிருபத்தைந்தும், தெளியுமின்றகெந்திபதின்மூன்றதாகுஞ் செயகாந்தமூன்றுஇரதமிரண்டுங்கூடி, அழியவதைக்குமரிச்சார்விட்டுச்சாம மாட்டியேயொருவில்லையாகத்தட்டே. ௧அரு

தட்டடாவெருப்போலவகலமாகத் தான்றிரும்பக்கல்வத்திலிட்டுவோட்டால்மூடிக், கட்டடாரவியிலிடுசாமமொன்று கறுத்தங்கேபற்பமாயிருக்கும்பாரு, மட்டடாவாய்விளங்கமிருசீரகமும் வாகானதிரிகடுகுதிரிபலையுநேராய், கொட்டடாதூளாட்டிப் பற்பத்தோடே கூட்டியேசூரணித்துவெடுத்துக்கொள்ளே. ௧அசா

சகலகுன்மக்குளிகை.

எடுத்ததொருசூரணத்திற்றீருநோய்கேளெண்குன்மங்கிராணியுடனக்கினிமாந்தம், படுத்ததொருநோயெல்லாம் பறந்தேயோடும் பாடுகிறேன்சகலகுன்மக்குளிகைதன்னைக், கடுத்ததொருவரப்பொடிதானெண்பதாகுங் கனகரசகெந்திசிலைகழஞ்சிரண்டாய், கொடுத்திடுவாய்குமரிநீர்தன்னாலப்பா குறைவின்றியொருசாமங்குழையவாட்டே. ௧அஎ

குழையவதையாட்டியேயடையாய்த்தட்டிக் கொடுரவியிற்கலத்தோடேசாமமிரண்டு, விளையவேவைத்திருந்துதிரும்பவாங்கு மேன்மைபொடிதானிந்துப்பிரண்டுபங்கு, இளையாததிரிகடுகுரண்டுபங்குவென்மகனேகடுக்காய்த்தூளிரண்டுபங்கு, திளையாமலிதுவெல்லாங்கரிப்பான்சாற்றில் தினமொன்றுஆட்டியேவாங்குவாங்கே. ௧அஅ

வாங்கப்பாஆட்டையிலேலைகப்படாமல் வழித்துதனைவிராகனெடைகுளிகைசேர்த்து, பாங்கானவிஞ்சிச்சார்தன்னில்தேனும் பஞ்சமென்றயோகசயகியாழத்தாலும், நீங்காமலூட்டவேகுன்மமெட்டு நேரான்கிராணிபீலிகையாம்வாயும், தாங்காதகுட்டமுதலக்கினிமந்தம் தரியாமலோடிப்போஞ்சத்தியந்தானே. ௧அகூ

சத்திகுன்மமுதலானநோய்கட்கெல்லாஞ் சாற்றுகிறேனனுபானகியாழமப்பா, சித்தரிடமூலமைப்பாபுளியம்பட்டை சீரானமூக்கரைவேராயிற்பட்டை, பத்தியுடன் திரிகடுகுகடுக்காயிந்து பரிவாகக்கியாழமிட்டுவைப்பாற்கேளு, முத்தியறுஞ்சுகந்தரசந்தன்னைச்சொல்வோ மூறையோடேபுலத்தியனேமுழுதுங்கேளே. ௧௧௰

சுகந்தரசம்.

கேளப்பாகெந்திரண்டுநாபியொன்றுகிருபையுடன்னப்பிரேக செந்தூரமொன்று, நாளப்பாவிவையெல்லாம் பலமாய்த்தூக்கி நயமானசூதமதிற்கழஞ்சியொன்று- சூளப்பாசீரகமுங்கொடுவேலிவேருஞ் சிகசிந்திற்சர்க்கரையும்வாய்விளங்கம், நீளப்பா எவாச்சாரம் நொச்சிவேரு நினைவாகஅரைப்பலந்தான்தூக்குதூக்கே. ௧௧௧

தூக்கிநொச்சிச்சாறுமாதளையின் பழச்சாறுந் துறையோடேயொவ்வொருநாள்துஞ்சஆட்டி, ஆக்கமுடன்குன்றியிடை குளிகைகட்டி யப்பனேபஞ்சமூலக்கியாழமாதல், தாக்குடைய விஞ்சிச்சார் தன்னிலாதல் தயவாகத்திசைமூலக்கியாழத்தாலே, நீக்கிடவேபெருநோயுமகோதரமும்வல்லை நீராமைசுவுசியிவையெல்லாம்போமே.

பஞ்சமூலக்கியாழம் திசைமூலக்கியாழம்.

போமென்றபஞ்சமூலக்கியாழங்கேளு புகழான திப்பிலியின் மூலங்கூட, ஆமென்றசெவ்வியமும்சித்திரமூல மடைவான வேர்க்கொம்புவிவையைத்தாகும், நாமென்றதிசைமூலகியாழஞ்சொல்வோம் நயமானபெருமுன்னைபெருவாகைவில்வம், வேமென்றபாதிரியுங் கண்டங்காலி மேலானநெரிஞ்சிவேர்சிறுவழுதலையின்வேரே. ௧௧௩

ஸ்திரீவிக்கிரமரசம்.

வேரானசிற்றுமல்லிபேராமல்லி வேர்க்கொம்புந் திசைமூலக்கியாழமாச்சு, பேரானகிரிச்சனங்களாறும்போகப் பேசுகிறேன்ஸ்திரீவிக்கிரமரசத்தைமைந்தா, நேராகச்சூதமொடுதாம்பிரங்கெந்தியாட்டுதினமொன்றுநொச்சிச்சாற்றில், சீராகவாங்கியொருவில்லையாக்கிச் சிறுசட்டிக்குள்ளிட்டுமண்தான்செய்யே. ௧௧௪

மண்செய்துதாளிதனிற்படிதானெட்டுமெணவிட்டுச்சட்டிதனையதன்மேல்வைத்துப், பண்ணிட்டசட்டியின்மேல்மணலுமிட்டுப்பாகாகச்சாமமொன்றுவெரித்துவாங்கி, உண்ணுதற்குமாதளம்வேர்த்தூளாலாட்டி யுத்தமனேவராகனிடைதூக்கிநீயும், வண்ணமுள்ளமாதளம்பூசாறுதன்னில் மாட்டியேகுன்றியிடைபற்பம்போடே. ()

பற்பத்தில்தீருகிறவியாதிகேளு படரானகல்லடைப்பு நீரடைப்பு, வெப்பமுறும்சதையடைப்புசோரைக்கட்டு வெண்கடுப்புசீயடைத்தல்வீரணக்கட்டு, அற்பமுறும்நரம்படைப்புமூத்திரங்குட்டமடைவையெல்லாந்தெறித்துப்புண்ணுறுமைந்தா, சொற்பமல்லபண்டிதன்தான்பனிரண்டுலட்சஞ் சுருக்கியதைச்சூத்திரமாய்ச் சொன்னேன்பாரே. ௧௧௬

சொல்லுகிறேன்சுரதோஷஞ்சன்னிவாதம்நூனுக்குடனேயுட்குத்துதனுவுக்கெல்லாம், வெல்லுமேநீட்டையிலேபாணம்போல விஷ்ணுபராக்கிரமரசந்தானுமப்பா, நல்லரசநாபிகெந்தி வெண்காரமிந்து நலமானஎவாச்சாரம்சத்தியட்சாரம், கொல்லுமே நோயனைத்துஞ்சங்கட்சாரங் கூடவேசமபாகங்கல்வத்தாட்டே. ௧௧௭

ஆட்டுவதுமத்தஞ்சார்சாமமொன்று வப்பனே குகையிலிட்டு வாயைமூடிக், கூட்டுவதுகுக்குடமாம்புடத்தைப்போடு குறைதீரப்பாகணைக்குப்பித்தைச்சொல்வோம், மாட்டுவதுமீண்பித்துபன்றிப்பித்து மைந்தனேபன்றியென்றால்காட்டுப்பன்றி, நீடியதைமாவிடையாய்க்குளிகைசெய்து நீயூட்டுகுளிர்ந்தசலமிஞ்சிச்சாறே. ()

சாறுகுந்தண்ணீராமிவற்றுக்கெல்லாந் தாக்கவேவாதசுரஞ்சந்நிவாதம், வீறுகும்வாதஞ்சீதாங்கதோஷமென்றுதின்னும்பிரலாபத்துனுக்குத்தானும், மாறுதகாண்டீபங்கெம்பீரம்பூத மதியழிக்கும்பிரலாபஞ்சன்னிபோகு, மாறுகுங்கிராணிமுதல் நீரிழிவுக்கெல்லாமானந்தவைரவத்தையறையக்கேளே. ௧௧௯

ஆனந்தவைரவம்.

அறைகிறேன்வெண்காரநாபிசூத மப்பனேசாதிலிங்க திப்பிலிநன்மிளகு, நிறைவாகத்தூக்கிநீயிஞ்சிச்சாறு நேர்சமன்சம்பழச்சாறுங்கலந்துகொண்டு, குறையாமலீரிரண்டுசாமமாட்டு குன்றிபோலுருட்டடாகுளிகைதானும், கறையானகிராணிக்குமுத்தக்காசுகனத்தவதிவிடையம்பொன்முசுட்டைவேரே. ௧௨0

முசுட்டைவேர்வேர்க்கொம்பு சரியாய்வாங்கி முறுகவதைக்கியாழமிட்டுக்குளிகையூட்டு, முசுட்டையுறமேதிமோர் புட்டினூட்டமோதிவருநீர்மேகமோடுந்தூர, முசுட்டைவேர்பழச்சாற்றில் சுவாசகாச முதிர்ந்துநின்றவேர்க்கொம்புகிராம்புதானு, முசுட்டைபெறுந்திப்பிலியுஞ்சரியாயாட்டி மூதிர்தயிரில்வராகனிடைகொடுத்திடாயே. ௧௨௧

## நீரிழிவுக்கு மேகாதிக்குளிகை.

கொடுத்திடவேயதிசாரந்தீருமப்பா கூரானவசீரணத்துக்குற வுகேளு, அடுத்துநீவழுதலையினீரிலூட்டு வக்கினிமாந்தத்துக்கறை யக்கேளு, கடுத்துடையதிரிகடுகுபொடியினூட்டு கனவாய்வுபோக வென்றால்கியாழஞ்சொல்வோம், படுத்திடுமேயெவ்வகையும் நிவர்த் தியாகப் பஞ்சமூலக்கியாழமடாபத்திகேளே. ௨௱௨

பத்தியுறுமேகாதிக்குளிகைசொல்லப் படரானநீரிழிவுவனைத் துமோடும், புத்தியுறுஞ்சூதமப்பாகழஞ்சுபத்து புகழானவப்பிரே கச்சிவப்பிரெட்டி, சித்தியுறுங்கெந்தியப்பாவைப்பதற்குத் திருமா ல்தன்தாரமதுவைம்பதாகும், வெற்றியுயர்சலாசத்தூக்கழஞ்சியைந் து மேலானகாரீயச்செந்தூரங்கேளே. ௨௱௩

செந்தூரங்கழஞ்சியுமோர்முப்பதாகுஞ் சேர்த்திடவேமேல்ம ருந்தைச்செப்பக்கேளு, பந்தாரப்பருத்திவிதைதேற்றான்வித்து பா ங்கானவெண்குன்றிவித்துதானும், கந்தாரம்புளியவிதைதோடுநல்ல கறகடகச்சிங்கியிவைசமனாப்நீயும், மந்தாரக்கழஞ்சியைந்துநிறுத்து வாங்கி யப்பனேமரமஞ்சள்தூக்குதூக்கே. ௨௱௪

மஞ்சளொனுங்கஸ்தூரிமஞ்சள்தானும் மன்னர்பணிநிலப்பனை வேர்சித்திரமூலம், மிஞ்சாமல்பப்பத்துக்கழஞ்சுதூக்கு வெம்புவெ ள்வேலக்கருங்காலிகருவேலம்பிசினும், துஞ்சவேகழஞ்சுபத்துதெ ன்னம்பாளைத் தூளங்கேழும்மூன்றுகழஞ்சுதூக்கு, தஞ்சமுறாந்தி ரிகடுவென்பதாகுந் தனித்திந்தவினங்களெல்லாநிறுத்துகொள்ளே.

கொள்ளடாயாவாரையுமருகிலந்தை தோடபிலேச்சாரதனைப் பிழிந்துநீயும், தள்ளடாமூன்றுதினம்வெவ்வேறாகத் தளராமல்நீரா ட்டிவாங்கிமைந்தா, எள்ளடாதேற்றான்விரைப்பிரமாணத்திலென் மகனேதிரட்டியேயெடுத்துவைத்து, உள்ளடா குளிகையொன்று தேனிலீய மேகமென்றதிரிபதையும்வெல்லுங்காணே. ௨௱௫

## நீரிழிவுக்குக்கியாழம்.

வெல்லுதற்குக்கியாழவகைசொல்லக்கேளு மேன்பொடிக்கியா ழமிடுதுடரிசுண்டை, நல்லசுண்டிநீர்பூலாகூரைகடலிறாஞ்சிநலமான இப்பவலாவரைபொன்முசுட்டை, வல்லவேவேனுவிலாமுத்தக்காய் திரிபலையும் வாவிறாபுரித்தேற்றம்வகைநேரேதான், புல்லவேதூளா க்கிபாண்டத்திட்டு புதுச்சட்டிக்குள்ளொருபிடிதான்போடே.

போட்டங்கேசலம்விட்டுரவியிற்சீலை புகழாகவேடுகட்டிமூன்றுசாமம், நீட்டங்கேதிரும்பவதைக்குறுக்கிக்காய்ச்சி நேராகக்காற்படிக்குள்கழஞ்சுதேன்தான், ஊட்டங்கேகாலைத்திலிரவிற்கொள்ளு உத்தமனேபொன்முசுட்டைவேரிஞோடு, நாட்டங்கேதிரிகடுகுமுத்தக்காசு நலமானமூங்கிலிலைதிரியலைநேராமே. ௨௱௮

நேராகக்கழஞ்சிரண்டுதூக்கிக்கொண்டு நீர்படிதான்ரண்டுவிட்டுவுழக்காய்க்காய்ச்சி, சீராகக்கொண்டிடவேகிரிகைகேளு சீய்மேகமதுமேகங்களமேகம், வாராததசமேகம்மத்திமேகம் வறளவேகனல்மேகம்வாதமேகம், பேராகவுருக்குமாங்கிஷமேகம் புகழாகாண்டுபத்துமேகம்போமே. ௨௱௯

சயம் சுவாசகாசத்துக்குக் கண்டங்காரிநெய்.

போகாதசயகாசம்போகமைந்தா புகழ்கண்டங்காரிநெய்யைப் புகலக்கேளு, வாகாகச்சமூலமெல்லாமிடித்துச்சாறு வாங்கடாபடியொன்றுநெய்தானொன்று, பாகமுடன்கலந்திதன்மேற்பாகங்கேளு பருநெல்லிசிறுதேக்குசிற்றரத்தை, சேகரமாம்வெட்பாலைகீழ்க்காய்நெல்லி சிறப்பானசிறுகாஞ்சோறிவேறே. ௨௱௰

சுவாசகாசத்திற்குத்திப்பிலிநெய்.

வேரானநெருஞ்சிவேர்தாளிசப்பத்திரி மிளகுமல்வகையொன்று கழஞ்சுநாலு, சீராகஆட்டியேநெய்யிலிட்டுச் சிவக்கநீகாய்ச்சியதை வாங்கிக்கொண்டு, நேராகத்துட்டிடைநீயருந்தச்சொல்லு நிஷ்டைத்திற்காசவகைநிவர்த்தியாகும், தீராதசுவாசசயகாசத்திற்குத் திப்பிலிநெய்தன்னையினிச்செப்பக்கேளே. ௨௱௰௧

கேளப்பாநிலவேம்புநன்னாரிவேருங் கிரிகையுறாங்குருவிஞ்சிராமிச்சம்வேர், நாளப்பாசந்தனமும்பேராமல்லி நலமானநெல்லிக்காய்கீழ்க்காய்நெல்லி, தாளாதசிரகமுங்கடுகுரோணி தனியானவாலுளுவையரிசிதானும், வாளப்பாதிப்பிலியுமிவையெல்லாந்தான் வகையொன்றுகழஞ்சுநிறைதூக்கிவாங்கே. ௨௱௰௨

வாங்கியதையாட்டிவைத்தூவாவின்பால்தான் மைந்தனேநாலுபடிவடிதான்கட்டி, பாங்காகநெய்ப்படியுமிரண்டுவிட்டுப் பதமாகச்சிவந்தபின்புவடித்துநீயும், நீங்காதவிளைவலிசுவாசகாசம் நீர்க்காசஞ்சுரகாசம்பித்தகாசம், தாங்காமலொருமக்கங்கொள்ளும்போது தலைகெட்டநூல்போலேசாடிப்போமே. ௨௱௰௩

மேகவியாதிக்கெல்லாம் ஏலாதிக்கிருதம்.

சாடிவிழுநோய்க்கெல்லாமேலாதிக்கிருதம் சாற்றுகிறேன்சாதகமாய்கேளுகேளு, சாடிவிழுநெய்யின்றிளண்ணை தன்னிற் சம்பிரதா

யமாருமடாசார்ந்துசெய்வாய், சாடிவளரத்தியாலரசுயித்தி தனித் தனியேமுதிர்மரத்தின்சிவந்தபட்டை, சாடியேயிடித்ததனைப்பாண் டத்திலிட்டுத் தயவாகத்தண்ணீர்தான் றாணியூற்றே. ௨௧௪

ஊற்றியேயெட்டொன்றாய்க்குறுக்கிநீயு முறவுசேரிரண்டுபடி தாழைநீர்தான், ஊற்றுவாயிரண்டுபடிவெள்ளறுகுநீர்தா னுத்தம னேரண்டுபடிநெய்யுமூற்று, ஊற்றிடவேயிரசாலின் முகிழெடுத்து உயர்ந்துநின்றபத்திமுகழ்மதுரங்கோட்டம், ஊற்றுவாய்சந்தனமு மிலுப்பைப்பூவு முற்பனஞ்சேர்தாமரையின்வளையம்வாங்கே. ௨௧௫

வளையமொடுசெங்கழுநீர் மூலந்தானு மகத்தானவெள்ளறுகு மூலந்தானும், இளையவேபேரீந்துநாகப்பூவு மியலானசெண்பகப்பூ விலவங்கப்பத்திரி, தளையவேகச்சோலநாணற்றுது தனித்துவளர்ந ன்னாரிநெய்தல்மூலம், விளையவேயமுக்குறாயேலந்தானு மீறுமறகழ ஞ்சொன்றுபாலிலாட்டே. ௨௧௬

ஆட்டியதிற்கலந்துகொண்டுநினந்தானுநு வளமாகக்காய்ச்சி நீயைந்தாநாளில், ஊட்டியேவடித்திறத்துவுண்டபோது உயர்ந்த தோரீளையெனும்புருக்கித்தீரும், நாட்டியேபித்தவறட்காசம்போகு ம் நலமளிக்குமுளமாந்தைநாடாதென்று, ஊட்டியேநெய்வார்த்த யெண்ணைசேர்த்து யுறக்காய்ச்சிமுழுகிடவேயுறுதிகேளே. ௨௧௭

உளமாந்தைக்கு கண்டங்காரிநெய்.

உறுதியென்றநீரிழிவுவுள்ளுணர்த்தி யுழலையுறங்கிரந்திமுதற் பிளவைதீரும், மிறுதியுறங்காலெரிவுமேலெரிவுதீரு மிதுதயிலநெய் கூடிற்கிருதமாகும், பெறுதியுறும்நல்லவர்க்குமிந்நூல்தான் பேசுகி றேனுளமாந்தையெட்டுந்தீரச், சுருதிபுரிகண்டங்காரிநெய்மைந்தா சொல்லுகிறேன்சமூலமும்வாங்குவாங்கே. ௨௧௮

வாங்கியேநாலெட்டுபலந்தானப்பா வாகானகூவிளமுமமுக்க றாவும், பாங்கிடவும்பேய்ப்புடலுமாடாதோடை பாங்கானசங்குசி றாவழுதலையோடாறும், தாங்கியேபிறத்திரீயிடித்துக்கொண்டு தண் ணீர்தானெண்குறுணைதன்னிலிட்டு, நீங்கிடாதெரியிட்டுவெட்டொ ன்றாக்கி நெய்படிநாலதிலிட்டுநெறிப்பின்கேளே. ௨௧௯

நெரிவெள்ளைபூசனிக்காய் தண்ணீர்தானும் நெய்க்குநேர்பால் நேராய்க்கலந்துகொண்டு, தறித்தான்றிப்பத்தியுமிளகுசெவ்வியஞ்

சமனாகவும் மூன்றுகழஞ்சு தூக்கு, திறியேலமிலவங்கப்பத்திரிபட்டைதிப்பிலியுமிலாமிச்சஞ் சிறுநாகப்பூ, மறமாஞ்சில்கர்க்கடகச்சிங்கியிவையெல்லாம் வகையொன்றுக்கிரண்டுகழஞ்சு தூக்கே. ௨௨௰

தூக்கியேபாவின்பாலிலாட்டிவாங்கிச் சேர்வறவேகலக்கிநீயடுப்பில்வைத்து, போக்கியேகணேசன்வைத்துத்தீபதூபம் புட்பத்தாலர்ச்சனைசெய்நைவேத்தியஞ்செய்து, தாக்கியேசொர்ணபுஷ்பஞ்சாத்தியங்கே தணல்மூட்டிப்பதமாகவைத்துக்கொண்டு, தேக்கியேதிப்பிலியும்பேரீச்சம்பழமும் சேரடாமும்மூன்றுகழஞ்சுதாமே. ()

கியாழவகை.

சேர்த்ததனைத்தினமூன்றுகழஞ்சிநெய்தான் றின்றிடவேயுளமாந்தைசுவாசகாசம், பார்த்தவுடன் கொன்றுவிடுஞ் சுணங்குமாந்தை பரிவானசையுறுசலத்தாலுமிக்க, மாற்றமுறுஞ்சலேந்திரனுமாறிப்போகு மைந்தனேராத்திரிக்குக்கியாழஞ்சொல்வேன், போர்த்தபுகழ்பொற்கடுக்காய்கண்டங்காலி புகழ்நெல்லிசிறுதேக்குமிளகுநேரே. ௨௨௨

நேராகக்கழஞ்சிரண்டுசட்டிக்குள்ளிட்டு நீர்படிதான்ரண்டுவிட்டுவுழக்காய்க்காச்சி, வாரமுடனுண்டிடவேசயநோயீடு வறட்சியொடு பீனிசமுமாரணமுமாகும், பேராகவின்னமொருகியாழங்கேளு பெருந்திராய்சுழலாவாரையின்மூலம், சேராய்நீசிறுதேக்குசுக்குநல்லதிப்பிலியும்சிறப்புடனேவகையொன்றுகழஞ்சுமூன்றே. ௨௨௩

மூன்றுகத்தூக்கியப்பாநொறுக்கிவாங்கி மூதிரவேரண்டுபடிசலத்திலிட்டு, ஊன்றியேதீயெரித்துவுழக்காய்க்காச்சியுண்டிடவேதேன்விட்டுவுறவுசெய்து, தான்றியேயின்னமொருகியாழஞ்சொல்வோந் தனிசுக்குப்பொன்முசுட்டைவேரினோடே, தூன்றியேசிறுதேக்குதேவதாரந் தூதுவளைபெருங்குரும்பைசீந்திகாணே. ௨௨௪

காணப்பாவமுதலைவேர்கண்டங்காரி கழஞ்சிரண்டொவ்வொன்றுகியாழமுன்போல், தோணப்பாதிப்பாதிப்பிலிமேற்பொடியதாசுத் தான்தூவியேசுகமாகக்கொள்ளச்சொல்லு, நீணப்பாபத்தியர்தாமெய்யும்பாலு நோதுவரையண்டமுமாமவரைப்பிஞ்சாம், பூணப்பா பீர்க்கிலாம்புடோலுமாகும் புகழானமுருங்கைமுதல்முசலாம்பாரே. ௩௨௫

முயலாகுங்கவுதாரியுள்ளானுகுமூதுவரால்நெய்மீனும்சுறாமீனுகும்,புயலானகொடிப்பையுமுப்புமாகும்புகழாதுநீரோய்க்கெல்லாம்

பூட்டுநன்றாய், மயலாகும்வாகடங்கள்பார்க்கவேண்டா மாந்தவகை விபரத்தைவகையாய்க்கேளு, அயல்காணுமயலொன்றுபிடித்துவந் து அப்பனேகால்தலையுங்குடலும்போக்கே. ௨௨௬

மாந்தவலிக்குச்சிநெய் மாந்தவலிவகை தொண்ணூற்றாறுக்கும்.

குடல்போக்கிநாலுபத்துப்பலந்தான்றாக்கிக் குமுறவேயிடித் தொருபாண்டத்திட்டு, அடலமுடனேறுகுறுணிச்சலமும்விட்டு அ ப்பனேநாலொன்றாய்க்குறுக்கியும், விடமுயர்தோடைச்சாறுகுரு ணிவிட்டு வெள்ளாவின்பாலுறுமிநாழிவிட்டு, நலநறுநெய்யங்கேயி ழுநாழிவிட்டு நாடிடவேமேல்மருந்தைச்சொல்லுறேனே. ௨௨௭

சொல்லுகிறேன்திப்பிலியுமதனின்மூலஞ்சுக்குடனேகடகசிங் கிசித்திரமூலம், செல்லுமாஞ்சிறுதேக்குகுருசாணியோமஞ் செவ்வி யமிருசீரகமுங்கிராம்பதானும், வெல்லுமேசடாமாஞ்சில்கடுகுரோக ணியிளகு கோட்டமிந்துப்புவாலுழுவையரிசி, அல்லுறவேமுந்திரி கையேலமிலவங்க மதிவிடையமரத்தைபத்திதிப்பிலியுந்தூக்கே.

தூக்கடாகழஞ்சிரண்டுபாகிலாட்டு சொல்லுவேன்பெருவாலி பெருங்குமிழுமுன்னே, ஆக்கமுறுபாதிரியுங்கண்டங்காரி யப்பனே சித்தாமல்லிபேராமல்லி, தேக்கடாகூவிளமுநெருஞ்சிதானுஞ் சிறு வழுதலையிவைகள்முதல்சமூலங்கூட, தாக்கடாதூதுவளை யமுக்க ராவேர் சங்கம்வேர்திப்பிலியுமிளகும்பாரே. ௨௨௯

பாரப்பாமரமஞ்சள்தேவதாரம் பருவரத்தைவகைக்கங்கேபல ந்தான்மூன்று, சேரப்பாதூளாக்கிஆணிநீரிற்றீயிட்டுநாலொன்றாய் க்குறுக்கிவாங்கி, ஆர்ப்பாயிவையெல்லாமொன்றாய்ச்சேர்த்து அடு ப்பேற்றிப்பூசைசெய்துவன்லமூட்டி, பேரப்பாமூன்றுநாளுறவை த்துப் புகழாகநாலாநாள்வடித்திடாயே. ௨௩0

கதலிக்கந்தகிருதம்.

வடித்துவைத்தநெய்யிலேகழஞ்சிதூக்கி மைந்தனேயரைக்கழ ஞ்சுதேனும்விட்டு, படித்தரமாய்த்திப்பிலிதான்மேற்பொடியுந்தூ விப்பாங்காகவுடம்பறிந்துவிருநேரமுண்ணு, நொடிக்குமுன்னோய் களறும்வச்சிரதேகம் நூணுக்கமாந்தொண்ணூற்றாறுசயமுந்தீரும், கடித்தவாய்துடைத்தாப்போல்பிணிவிண்ணேகும் கதலிகந்தக்கிரு தங்கள்கழல்கின்றேனே. ௨௩௧

கதலிகந்தக்கிருதங்கேள்பெரும்பாட்டுக்கு காசங்கள்சயரோ கமெல்லாந்தீரும், கதலிக்கந்தமூலம்பூவிரண்டுநேராய்கணக்கவொரு துலாமிடித்துப்பதக்குநீரில், கதலிக்கந்தம்நாலொன்றாய்க்குறுக்கக்

காய்ச்சி கலந்ததற்குள்பசுவினெய்படிதானென்று, கதலிக்கந்தமாவின்பால்படிதானென்று கரும்புநீர்நெல்லிக்காய்காணுந்தானே.

தானென்றநிலப்பனைவேர்தண்ணீர்மிட்டான் றன்னீர்தான்வகைநாலுபடிதானுலு, கானென்றுகலந்தவைத்துகடைமருந்தைக்கேளுகழரேலமிலவங்கம்நேர்வாளகெந்த, மானென்றசடாமாஞ்சிதிரியால்விழுது மைந்தனேயல்லியுடன்செங்கழுநீர்க்கிழங்கும், தேனென்றநெய்தலொடுகழஞ்சுமூன்று திறமாகஆட்டியதைநெய்யிற்சேரே.

நெய்யையடுப்பேற்றியேயனல்மூட்டி நேராகநாலுதினஞ்சிறுகொதிப்பாய்வைத்து, மெய்யாகவைந்தாநாள்சிவக்கக்காச்சி வெண்மையுடன்மூன்றுநாளூறவைத்து, எய்யாமலிருநேரமிடைநான்கேளுவென்மகனேலிருகழஞ்சுவியல்பாய்த்தூக்கு, அய்யாகேள்கொண்டிடவேயொழியுங்கோர்வை யறைகிறேனுள்ளபடியறைகிறேனே.

பெரும்பாட்டுக்கு நிலப்பனைநெய்.

அறைகிறேனெனும்புருக்கிமேகவெட்டையடர்ந்தொழுகும்பெரும்பாடுமேகநீரிழி, நிறைநிற்கும்பெரும்பாட்டுக்கின்னஞ்சொல்வேன் நெய்யடாநிலப்பனைவேரொதியம்பட்டை, மறையாதக்கருங்காலிப்பட்டைதானும் வாய்க்கடங்காக்கரு நாவற்பட்டைதானும், குறையாமல்வகைநாலுபலமுநூறுகுருகவிடித்திருதூணிநீரிறாட்டே.

ஊட்டியேயெட்டொன்றாய்காய்ச்சிவைத்து வுறவாகவிருநாழிபசுவினெய்யை, நீட்டியேயிருநாழிப்பாலும்வாரு நினைவாகப்புளியாரைச்சாறவ்வண்ணம், நாட்டியேநீர்வள்ளிக்கிழங்குசாறு நயமாகவிருநாழிகூடவிட்டு, வீட்டுவாய்பொன்முசுட்டைசிறுகாஞ்சோறிவிளாம்பழமுந்திரிபலையுங்கொத்தமல்லியாமே. ௨௱௬

கொத்தமல்லிமாங்கொட்டைபேரீச்சம்பழமுங் கூரானமுந்திரிகைபெருங்குமிழின்பழமும், வித்தமல்லியரத்தைசுக்கு வெரிமலர்த்தாதுமென்னிலவம்பிசின்கொத்தான்காட்டாத்திப்பூவும், மத்தமல்லிக்கீழ்க்காயுமொதியம்பட்டை, மாதளம்பழத்தோலிலைவப்பிஞ்சுதானும், சுத்தமல்லியதிமதுரம்விளாமரத்தின்பிசினுந் தூய்யவெள்ளிலோத்திரமுத்தக்காசே. ௨௱௭

முத்தக்காசஞ்சனச்சாத்திரபேதி மூலமாமமுக்குறாநன்னாரிகல்நார், மத்தக்காலாமிச்சமத்திதிப்பிலி மைந்தனேசிறுநாகம்பிளியவிரைத்தோடு, உத்தக்காயிலிலவங்கப்பட்டைபத்திரி யோனுபஞ்சமூக்கருகுங்கிலியமேலம், சுத்தக்காவகையொன்றாகழஞ்சிரண்டு கூட்டிநீயாட்டுவாயாவின்பாலே. ௧௱௮

பாலினாலாட்டியப்பாநெய்க்குளிட்டுப் பதமாகவடித்திறுத்து ப்பரணிசேர்த்து, சாலவேகழஞ்சிரண்டுகாலத்திலூட்டுசோயரட்சை வேளைக்குக்கியாழஞ்சொல்வேன், நீலவேபருத்திவிதைநிலப்பனைகி ன்கிழங்கு நீர்வள்ளிமுசுமுசுக்கைவேருங்கூட, நாலப்பாபேரீச்சம் பழமுமொக்க ரண்டுகொசிடைநாழிபாலிற்போடே. உ௩௬

அசுவகெந்திநெய்.

போட்டப்பாவுழக்காக்கிவடித்துக்கொண்டு புரட்டக்கேள்நெ ய்தனிலேகாலாழாக்கை, நீட்டப்பாசர்க்கரைதான்வராகனிரண்டு நீ யிட்டுக்கொடுத்திடவுந்தீருநோய்கேள், பூட்டப்பாபெரும்பாடுவெ ளும்புருக்கிப் பொருமலுடன்தாகமுடன்சோபகாசம், பாட்டப்பா பிரமியமுஞ்சுவாசகாசம் பாண்டுரத்தமேகமெல்லாம்பாருந்தானே.

பாருமேசயங்கடப்பாதிருப்பதற்குப் பாடுகிறேனசுவகெந்தா திநெய்யை, வீறுடையவமுக்குருதுலாந்தானென்று மேனிச்சாரத் தனையும்வேருய்க்கொண்டு, மீருமற்சாறுவகைக்காற்றுடாமல் மிஞ் சாமல்பலம்பத்துநிறுத்துக்கொண்டு, வாறுடைய பெருங்குமிழும் பெருவாகைமுன்னை மகத்தானகூவிளம்பாதிரியுங்கேளே. உ௪௧

பாதிரியுஞ்சித்தமல்லிபேராமல்லி பண்பானநெல்லியொடுகண் டங்காரி, நீதிசிறுவழுதலைவேர்பலந்தான்மூன்று நிறுத்தங்கேயிவை யெல்லாமிடித்துமைந்தா, ஆதிபெரும்பாண்டத்திலிட்டுப்பின்பு அ ளந்துவிடுயிருதூணிசலந்தானப்பா, போதிலேயெட்டொன்றாய்க் குறுக்கிவாங்கிப் புகட்டடாஆவிநெய்யிற்படிதானென்றே. உ௪உ

நெய்விட்டுமதுரமொடுசூரியபத்திரி நேரானதேட்கடையுந்திரி கடுகு, ஐயுற்றதிரிபலையுந்தேவதார மரத்தைமஞ்சள்மரமஞ்சள்திப் பிலியின்மூலம், பையுற்றகொடிவேலிபடமடக்கிப் பருந்தகரம்வெ ட்பாலைகடுகுரோகணி, நொய்யுற்றவரேணுசமுபட்டசந்தம் நோக்க வேயின்னமொன்றுநுனுக்கந்தானே. உ௪௩

தானென்றயெவாச்சாரஞ்சக்கியட்சாரம் சகாயமருள்ரசகாசு லவணந்தானும், தானென்றவகையொன்றுவராகனுலு தனித்தனி யேதூக்கிநீயாட்டிமைந்தா, தானென்றுகலக்கியேநாலுநாள்தான் சு யிக்கிணையாய்த்தீயிட்டுவைந்தாநாளில், தானென்றுவடித்தெடுத்து மேல்மருந்தை சாற்றுகிறேன்தாம்ப்ரபற்பங்காணுந்தானே. உ௪௪

அட்டசந்தநெய்.

காணப்பாதாம்பிரபற்பம்பலந்தானிரண்டு கனத்தமணித்திப் பிலியும்பலந்தானெட்டு, தோணப்பாதூளாக்கிநெய்யிலிட்டு துஞ்

சாதமேதேன்படிதானிரண்டுவிட்டு, பூணப்பாதர்ளியபுடந்திங்களொ
ன்று புகட்டிவைத்துப்பின்னருந்தபோம்நோய்கேளு, வீணப்பாச
யரோகஞ்சுவாசகாசம் வீறுனபீலிகையுமரோசிபோமே. ௨௪௫

அரோசிபோஞ்சுரம்போகுகுன்மம்போகு மப்பனேயறுகூலயி
ரத்தபித்தம், அரோசித்ருமெலும்புருக்கிவெப்புப்பாவை யனேகமா
ம்ரோகங்கடீருந்தீரும், அரோசியறுமட்டசந்தவிபரங்கேளு அதிற்
கட்டைமலர்க்காயிலவங்கப்பட்டை, அரோசிபோங்கோஷ்டமுட
ன்கஸ்தூரிமஞ்சள் அப்பனேகுங்குமப்புகர்ப்பூரந்தானே. ௨௪௬

நீர்வள்ளிநெய்.

கர்ப்பூரஞ்சமுத்திரபச்சையோடு சுாணப்பாவட்டசந்தங்கரு
திப்பாரு, கர்ப்பூரநீர்வள்ளிநெய்யைக்கேளு கருதியதின்கிழங்குரு
சார்படிதானு, கர்ப்பூரவாவின்பால்படியுநாலு கட்டதற்குளிருநா
ழிநெய்யைநீயும், கர்ப்பூரநற்பாலேவெரிஞ்டை காணதுத்திமாகாளரி
க்கிழங்கும்வாங்கே. ௨௪௭

கிழங்கப்பாநன்னரியிருவேலிவேருங் கேளடாமுசுமுசுக்கை
வேருங்கூட, களங்கமில்லாவிலுப்பைப்பூமிசர்க்கரையுங்கருமதூர
ஞ்சந்தனமும்பேரீச்சம்பழமும், முழங்கவேபற்பாடகம்யாவாரப்ப
ட்டை முந்திரிகைசிந்தியுடனத்திப்பட்டை, விளங்கவேநாலிளிட
விழுதுங்கூட வெள்ளிச்சங்கொழுந்துடனேவிபரங்கேளே. ௨௪௮

விபரங்கேள்வகையொன்றுமிருமற்பாலில் மிக்கவேநாலுசாடம
மாட்டிவாங்கி, விபரமாய்நெய்யுடனேகலந்துவைத்து மெதுவாகஎ
ரியெரிப்பாய்தினந்தான்மூன்று, விபரமாய்நாலாநாள்வடித்துக்கொ
ண்டு மேன்மைபொடிதேனுக்குச்சமனாய்ச்சேர்த்து, விபரமாய்சர்க்
கரையும்பலந்தானாறு மீறுமல்திப்பிலியும்பலந்தானொன்றே. ௨௪௯

கிறாச்சினம் ஆறாக்கும் இளநீர்.

ஒன்றாகப்பொடித்துநெய்யிற்போட்டு வுண்டுவரக்கழஞ்சொ
ன்றுகாலத்தாலே, நின்றுயும்பெருபாடு கட்டிச்சோரை நிலையாகு
வெலும்புருக்கிச்சயமுமீளை, பொன்றாகக்காலெரிவு மூர்ச்சைதாகம்
பொன்றிவிடும்பஞ்சதனிற்புறப்பட்டாப்போல், குன்றுதவிளநீர்நெ
ய்கிரிச்சினங்களாறுங் கூட்டோடேதிறந்திடவுங்கூறினேனே. ௨௫௰

திறந்துவிடுமிளநீர்தான்படிதானு செப்புகிறேன்பூசனிக்கா
ய்தண்ணீர்நாலு, துறந்துவரும்வாழையுடக்கிழங்கின்சாறு சொரிகு

ண்ணீர்விட்டான்றன்கிழங்கின்சாறு, மறந்திடா தொவ்வொன்றும் படிதானுநாலு மைந்தனேயாவின்பால்படியுநாலு, கறந்துவிடுக ருப்பஞ்சாறு பொன்னாங்காணி களங்கமறுநீர்முள்ளிச் சாறும்வாங்கே. ௨௫௧

வர்ங்கடாயிச்சாறுபடிநான்ரண்டு வகையானசிந்தியுடகியாழங்கேளு, பாங்காகநாலுபடிநெருஞ்சிச்சாறு பார்புகழுமோரிலைத்தாமரையின்சாறு, நீங்காமலெண்ணான்குபடியுமொன்றாய் நீபெரியபாண்டத்தில்விட்டுப்பின்பு, ஆங்கமுறுமாநெய்யும்படியிரண்டு வப்பனேசலாசத்துகல்நார்காணே. ௨௫௨

கல்நாருங்கல்மதமுஞ் சிறுபூளைவேருங் கருவத்திதிப்பிலியும் பொன்னாங்காணி, செந்நாயுருவிவேர்கூகைநீருஞ் சிறுமுள்ளியின் விரையுமேலமெள்ளு, மன்னருந்தேத்தின்விதை பொன்மத்தன்வித்து மைந்தனேவகையொன்றுவராகன்மூன்று, மின்னார்நன்பாலிலே யாட்டுவாங்கி விரவிமேயடுப்பேற்றிவடித்துக்கொள்ளே. ௨௫௩

வடிக்குமுன்னேயாவின்பால்படி நானு மாட்டியேநிறுத்ததனைநீர்வாங்கிவைத்து, குடித்திடவேசீனியதிற்படிநானென்று கொள்கியேதேன்படியுமுக்கால்சேர்த்து, முடித்திருக்குநோய்க்கெல்லாங்கழஞ்சுமூன்று மொண்டுண்ணக்கிரிச்சனங்கள்சுக்கிலமேகம், குடித்திருக்குங்காலெரிவுதாகமூஷ்ணங் காட்டகத்தில்வீழ்திப்போறகரிந்துபோமே. ௨௫௪

கூழ்ப்பாண்டகிருதம்.

போகாதசயமுதலாய்மேகமெல்லாம் போவதற்குபூசனிக்காய் நெய்யைக்கேளு, வாகானபூசனிக்காய்ச்சாறுபடியெட்டு மைந்தனேநீர்வள்ளிக்கிழங்கின்சாறு, பாகாகப்படியெட்டுகருப்பன்சாறு படியானரண்டுபால்பசுவினெய்கேள், ஆகமுடன்படியான ரண்டுசேர்வொன்று யளந்துவிடுபாண்டத்தி லறையக்கேளே. ௨௫௫

அறைகிறேன்நிலவங்கமேலமிந்து வப்பனேவிழாவரிசியசமதாகம், நிறைகிறேன்சாதிக்காய்சிரகமுங்கேளு நேரானசதகுப்பைகூகைநீறு, மறையாதமுந்திரிகைபேரீச்சம்பழமும் மகத்தானகோட்டடதிமதுரந்தானும், நிறைப்பாகத்தூக்கியேபாலிலாட்டி நெய்யிலிடுபெய்வாழைப்பழந்தான்பத்தே. ௨௫௬

பழம்போட்டுவெடித்துடனே கடைந்துகொண்டு பாய்க்கவாய திலுழக்குப்பஞ்சதாரை, களங் ரின்றிப்பராபரனைநினைந்துகொண்டு கழஞ்சிரண்டுவிருநேரமுண்டபோது, உளமாந்தைசுரமாந்தைநெஞ்சிஞேவு உத்தமனேமேகத்திற்பிரிச்சனங்களாறு, மூளம்போட்டு மூத்திரப்பாளாரத்த மூற்றுநின்றரத்தகாசமெல்லாம்போமே. உடுஎ

வெள்ளுள்ளிக்கிருதம்.

போவதற்குக்குடல்வாதம்சூலைவாதம் பொன்றிவிழவெள்ளுள்ளிநெய்யைக்கேளு, போனதற்குத்துலாமொன்றுவெள்ளுள்ளிப்பருப்பு புகழாகவிடித்ததனைபாண்டத்திட்டு, போவதற்குள்பதினுறும ரக்கால்தண்ணீர்புகட்டிநீமுக்குறுணியாகவாங்கி, போவதற்குவகைவிபரம்படிதான்மூட்டி பூட்டுதற்குவகைறகிறேன்புகழ்ந்துகேளே.

கேளப்பாபெருங்குறும்பைவில்வம் பாதிரிகிரிகையுறப்பெருங்குமிழுமிவைவேராக, ஏளப்பாபலமறைதானெவ்வொன்றுகூட்ட மிடித்துமேநாற்குறுணிசலத்திலிட்டு, நீளப்பாரண்டுபடிநெடுநாளைக்காடி நீர்விட்டுநேர்மாதுளம்பழச்சார்தானும், தாளப்பாரண்டுபடி திறமாய்ச்சேர்த்து சாரப்பாதிரிகடுகுதிரிபலையுங்காணே. உடுகூ

காணப்பாவோமமிந்துவிருசீரகமும் கடையில்வாழ்செவ்வியமுந்தேவதாரம், பூணவேபுளிகடலைகாணைமூலம் பொருந்துமீவகைக்கங்கைகழஞ்சுநாலு, தோணவேவெள்ளாட்டுப்பாலிலாட்டி துகையாகரண்டுபடிநெய்யுஞ்சேர்த்து, ஊணவேவடித்திறுத்துக்கழஞ்சிரண்டு உண்டிடவுங்குடல்வாதமாறும்போச்சே. உசூ0

வல்லாரைநெய்.

போச்சென்றதோயாதவாதங்காசம் புணைந்தெழும்பும்வட்டைமுதற்றுடசோமம், மாச்சென்றதாசூலையஸ்திவைப்பும் படருகின்ற பாண்டுபீலிகையும்போக, வாச்சென்றவல்லாரைநெய்யைச்சொல்ல மைந்தனேயருந்திடவோராசைகேளு, நீச்சென்றவல்லாரைப்பசுவின்பாலும் நேரானசீதேவிசெங்கழுநீர்ச்சாறே. உசூக

சாறுபடிமுன்றுன்குவிளநீர்த்தண்ணீர் தானிரண்டுபடிநெய்யைங்கால்கூட்டி, மீருமற்குன்றிவேர்செங்கழுநீர்மூலமேலானமதுரங்கோரோசினைதான்கூட்டம், கூருனவத்தியிலைபச்சைகற்பூரங்குறை

யாமற்கழஞ்சொன்றுபாலிலாட்டி, ஆறுமற்கொதிப்பிட்டுமூன்றுநா
ள்தான் அப்பனேநாலாநாள்வடித்துக்கொள்ளே. ௨௬௨

கொள்ளவேகாசிடைதான்விஷங்கடீரும் கூறுனநாபிஞ்சுகழு
தைநஞ்சு, விள்ளவேபாலியெட்டிநஞ்சுதீரும் மேல்வற்றுக் கால்வற்
றுக்காந்தல்நீரும், துள்ளுமேயஸ்திதாரமெனும்புருக்குகுன்மமும்வ
யிற்றெரிவுவாயிலெச்சில், அள்ளவேகுறைந்தாற்போனுடனேதீருமனேகசுகமுண்டாகுமப்பாபாரே. ௨௬௩

புளிபாரைநெய்.

பாரப்பாபுளியாரைநெய்யைச்சொல்வேன் படரானகிராணிவ
கையாறும்போக, நேரப்பாபுளியாரைக்குறுணிச்சாறு நெய்தானுமி
ரண்டுபடியாகனாழி,பேரப்பாதிரிகடுகிந்துபெருங்காயம்பேரானயெ
வாச்சாரம்சாதிக்காயும், காரப்பாவெட்பாலைதிப்பிலியுமூலம் கிராம்
புமாதுளம்பூவுமஞ்சள்காணே. ௨௬௪

பலாதிநெய்.

காணவேயிலவங்கமிவைகளெல்லாம் கழஞ்சியங்கேவகைக்காறு
தூக்கியாட்டி, ஊணவேகாய்ச்சிநீகொடுக்கும்போது வுத்தமனேயா
றுவகைக்கிராணிதீரும், மாணவேபலாதிநெய்யைச்செப்பக்கேளுவ
டிப்பட்டைபலாசம்பால்நாலெட்டாகும், தோணவேகலந்தூக்கி யி
டித்துமைந்தா சொல்லுகிறேனிருகுறுணிநீரிலூட்டே. ௨௬௫

தயிர்நெய்.

ஊட்டியேபடியொன்றுய்க்குறுக்கிவாங்கி யுறவரைப்பாயிலேத்
தண்டுகழஞ்சுதானும், ஆட்டவேபடிநெய்யையதனிற்சேர்த்து வன
லிலிட்டுப்பதமாகவடித்துநீயும், மூட்டவேகிராணிகுன்மம்கழிச்சல்
விக்கல் முறையெல்லாங்குறைதீருமோசமில்லே, நாட்டவேதயிர்நெ
ய்யைமைந்தாகேளு நலமானதயிர்குறுணிநெய்நாழிதானே. ௨௬௬

தானென்றபெருங்காயமோமத்தோடும் சாற்றுவாய்திப்பிலியு
ங்கடுக்காய்கூட, மானென்றவட்டதிருப்பிகருஞ்சீரகமு மைந்தனே
புங்கம்வேர்வகைக்கோர்பத்து, தேனென்றமோகொம்பு முப்பதா
கும் சேரவேகழஞ்சுநீர்தூக்கியாட்டி, நானென்றவெண்குறுணி நீரி
லிட்டுக்காய்ச்சியேநாலொன்றுய்நெய்யிற்சேரே. ௨௬௭

நெய்யிற்சேர்திப்பிலியின்மூலந்தானும் நேரானகாட்டுதிப்பிலி
யுங்கூட, உய்யவிருசீரகமுமத்திதிப்பிலியுமுற்பனஞ்சேர்வில்வக்கா
ய்வட்டத்திருப்பி, அய்யமில்லாமரமஞ்சள்வெட்பாலேயரிசி யதிமது

ரமரத்தையிவைவராகனுறுசேர்த்து, கையோடேவடிந்திறுந்துவரு
ந்தும்போது கிராணிகுன்மமதிசாரஞ்சூலைபோமே. ௨௬௮

சுக்குநெய்.

சூலைபோஞ்சுக்குநெய்யைச்சூட்டக்கேளு சுக்குநீ யிரண்டுபக்
துபலமுந்தாக்கி, சீலமுறுமாயிலுடபட்டை, தண்ணீர் சேரடாசுக்குக்
குச்சமனுயப்பா, சாலநீயிடித்ததனைமுக்குறுணிநீரிற் றுக்கியேநாள்
ஒன்றாய்க்குறுக்கிவாங்கி, பாலுறையுந்தயிர்தண்ணீர் படிதான்ரண்
டு பண்பானநெய்யதற்குள்ரண்டரைதானூற்றே. ௨௬௯

ஊற்றிடுவாய்பெருங்காயந்திரிகடுகுசெவ்வியமோமத்தி திப்பிலி
யுங்கொடிவேலிவேரும், ஊற்றிடவேதிப்பிலியின்மூலந்தானுமோமங்
கிவளரெவச்சாரமொவ்வொன்றைக்கேள், ஊற்றிடவேகழஞ்சிரண்டு
சேர்த்துக்காய்ச்சி யொருநேரமுக்கழஞ்சுண்டபோது, ஊற்றிருந்த
வதிசாரம்பாண்டுசோகை யோடிப்போமண்டலந்தானுண்மைச்சொ
ல்லே. ௨௭௰

பொன்முசட்டைநெய்.

உண்ணையிலேமுருக்குவலிவயிற்றுநோய்வு உடல்நோய்வு காங்
தலிவையுடனேநிற்கும், உண்ணவேபொன்முசட்டை நெய்யைக்கே
ளு உண்ணவேபொன்முசட்டைசித்திரமூல, மோங்கிநின்ற மர்தள
வேர்த்தொலிகடானும், உண்ணவேமாதளந்தோடதிவிடையங்கோ
ஷ்டமுற்பனஞ்சேர்த்திப்பிலியுமூலங்காணே. ௨௭க

மூலமுடன்சுக்குதிப்பிலியுமஞ்சளுறுதேவதார மரமஞ்சள்நா
ளும், ஆலமுறும்வாலுழுவையிலத்தைபட்டை யப்பனேவெட்பாலை
வசம்பரத்தை, ஏலமுடன்சிற்றேலங்கடுரோணி யிவைங்கப்பட்
டையுடன்பத்திரியுமோமம், பாலிதற்குரண்டுபடிநெய்யுநாழி பாய்
ச்சிநீவடித்திறுத்துப்பாணிசேரே. ௨௭௨

பஞ்சகௌவியக்கிருதம்.

சேர்த்தங்கேபாலருக்குக்கிராணிமாந்தஞ்செப்பரிய கணைமீசவி
காமாலைசோகை, பார்த்தங்கேமனமுறைந்துக்கொடுக்கநீரும் பஞ்
சகௌவியநெய்யைப்பகரக்கேளு, வார்த்தங்கேபால்தயிர்நெய்கோ
மயமுநீரு மைந்தனேபிழிந்துகொண்டுமார்க்கங்கேளு, ஊர்த்தப்பா
வைந்துவகைநீருங்கேளு ஒருபத்துப்படியாகவளந்துகொள்ளே. ()

அளந்ததர்க்குக்கர்க்கவகைசொல்லக்கேளு அதிமதுரஞ்சிறுதே
க்குகோட்டமிந்து, விளந்தணியும்வாய்விளங்கங்கொத்தமல்லிமுரா
வரிசிவாலுழுவைவெட்பாலையரிசி, வளந்தனநல்வசம்புள்ளிதேவதா
ர மகத்தானசதகுப்பைபரத்தைகெந்தம், உளங்குகருஞ்சீரகமும்
பூலாப்பட்டை யுற்றபூலாவிருட்சமரப்பொடிநன்னுரி. ௨௭௩

நன்னாரிபொன்முசுட்டைநெல்லிவேரும் நலமானசாரணைவேர்திழுக்காய்நெல்லி, பொன்னாருமிலப்பனையுந்துத்திவேரும் புகழ்ந்திடுகுரோசணியும்பெருங்குரும்பை, மின்னாருமதிவிடையஞ்சாதிக்காய்காந்தமிக்கபத்திரிகடுகுவில்வவேர்சாம்பல், முன்னையதிரிபலையுங்கழஞ்சாய்த்தாக்கி முக்கியமாய்வரைத்துந்தநெய்யிற்சேரே. உஎ௫

அரைத்திட்டமருந்தோடேமூன்றுநாள்தானடுப்பேற்றிக்கொதிப்பிட்டுநாலாநாள்தான், விரைந்துநீவடித்தேதான்றினந்தானெட்டு விபரமுடனெற்குழியில்வைத்துப்பின்பு, வரைந்துதினங்காலையில்கழஞ்சிகொள்ள வற்றுதபெரும்பாடுகுன்மந்தீரும், கரைந்திழியும்பீனிசமும்பித்தபாண்டுங் காமாலைபெருவயிறுந்தீருங்காணே, ()

பவுத்திரத்திற்கு குக்கல்நெய்.

காணவேசொல்லிவிந்தப்பிரயோகத்தைக் கறைந்தபடி யறைந்திட்டேன்களங்கமின்றி, தோணவேபிணியுள்ளோருண்டாராகில்துயர்தீருஞ்சுகமாகுந்தேகந்தானும், கோதைக்குக்குல்நெய்தான் பஞ்சகோலங்கூறுகிறேன் திப்பிலிதிப்பிலியின்மூலம், பூணவேசெவ்வியமுஞ்சித்திரமூலம் பொன்முசுட்டைசி[illegible]டன்சுண்டைவேறே. ()

வேரானவில்வவேராடாதோடை வேர்க்கொம்பு பேய்ப்புடலுங்கண்டங்காரி, ஆயுமுறுமிம்பத்தோல்கருவேர்பட்டை ஆயிலியத்தோல்புங்கந்தோல்கொன்னைறைத்தோலும், சீரானமுத்தக்கா சாடுதின்னுப்பாலைசெங்கடுக்காய்கொத்தமல்லிதேவதாரம்,வாரமுறும்வசம்புமுட்காவலையின்வேரும்வகையொன்றுகழஞ்சங்கேயறுபதாமே.

ஆமப்பாவகைவகையேநிறுத்துவாங்கி ஆட்டியே தூளாக்கித்தூணிநீரில். வேமப்பாயெட்டொன்றாய்க்குறுக்குவாங்கி விடுநெய்யுமொருபடியாமேல்மருந்தை, நாமப்பாசொல்லுகிறேன் சீனக்காரம் நாகப்பூதிரிகடுகுதேவதாரம், ஓமப்பாதிரிபலையுஞ்சவாக்காரமேலம் உசித்தசத்திசாரகறுங் கோட்டந்தானே. உஎசு

கோட்டமொடுவசம்புயிலவங்கப்பத்திரி கொடிவேலிவேர்ப்பட்டைதிப்பிலியின்மூலம், வாட்டமுறுங் கரிப்பானுங் கடுகுரோணிமைந்தனேசாரணையுந்தேவதாரம், மூட்டவேயதிவிடையம் பொன்முசுட்டைவேரு முத்தமனேவெண்கடுகுகடுக்காய்மாஞ்சில், ஆட்டமிடும்பெருங்குரும்பையத்திதிப்பிலி யழுகானபெருங்காய மோமம்பாரே. உஅய

ஓமமோடிந்துப்புவளையலுப்பு வுறக்காய்ச்சலவணமொடு பொட்டிலுப்பு, ஆமமொடுகல்லுப்புபெருமரத்தின்பட்டை யடவானவுவர்வேரும்வாகமென்று, சோமமுறுஞ் சுத்திசெய்த குக்கிலப்பா

தூக்கடாவைந்துபலந்தூளாயாட்டி, ஏமமுறமருந்நெல்லா மொன்றாய்ச்சேர்த்து என்மகனேயாவின்பாலாட்டிடாயே. ௨௮௧

குக்கில்நெய்.

ஆட்டியந்தநெய்தனிலேகலந்துகொண்டுஐந்துநாள் கொதிப்பிட்டுவாறுநாளில், மூட்டியேவடித்திறுத்துப்பக்கமொன்றுமுன்போலநெற்குழியில்வைத்தெடுத்து, ஊட்டுவாய்வராகனெடைவாரமாறு உண்டிடவேபவுத்திரமும்பிளவைசூலை, நாட்டியதோரட்டகுன்மம் விப்புருதிவருத்தம் நாவிற்புண்முலைக்குத்துநாசமாமே. ௨௮௨

நாசமப்பாபலபுண்ணும்யோனிச்சூலை நலங்கெடுக்கும்பலவிரணங் கண்டமாலை, நேசமாய்த்தனிக்குக்கில்நெய்யைச்சொல்ல நீகேளுபுலத்தியனேநினைவுகொண்டு, வாசமுறும்வேப்பந்தோல் கண்டங்காரி மைந்தனேபேய்ப்புடலுமாடாதோடை, நேசமெனுஞ்சீந்திசிறுவழுதலையின்வேரும் நிறையாகப்பத்துப்பலங்காணுட்டே. ௨௮௩

ஆட்டியேயெண்குறுணிநீரிற்சேர்த்து அக்கினியில்மாட்டியதைக் குறுணியாக்கி, ஊட்டுவாய்நெய்யங்கேயறுகாலப்பாவுறச்சேருபொன்முசுட்டைவாய்விளங்கம், தீட்டியதோர்செவ்வியமுந்தேவதாரந் திப்பிலியுமெவாச்சாரஞ்சத்தியட்சாரம், சூட்டுவாயேலமஞ்சள் வீழிவேர்த்தோல் சுகமானவெட்பாலைமிளகுதானே. ௨௮௪

மிளகோமங்கொடிவேலிகடுகுரோணி மூசமாமஞ்சிட்டி யதிவிடையமாஞ்சில், இளநாகக்கடுக்காயும்வசம்புநல்லவியல்பானசீரகமுமிடைதான்கேளு,வளமாகக்காசெடைதானிரண்டுதூக்கிமைந்தனே குக்கிலப்பாபலமுமொன்று, களவாகத்தனித்தண்ணீர் விட்டுஆட்டி காய்ச்சடாவாறுநாள்வடித்துக்கொள்ளே. ௨௮௫

வடித்ததொருநெய்யிலே வராகன்றாக்கி வாறுவுகண்டிடவே மைந்தாகேளு;குடிக்குமுன்னேநசியமிடுவுடம்பிற்பூசுகொடுங்கள்ராசபவுத்திரங்கள்வீக்கம்போகும், கடித்திருவிற்புருதி கண்டமாலைக் கிராணிமுதற்கழல்வாதம்பேய்முசுட்டை, துடித்துவிழும் பிணிசமுஞ்சூலையிலை சுகமாகும்அருப்புண்வாந்திபோமே. ௨௮௬

புடோல்நெய்.

வாந்திபோம்புடோல்நெய்யைமைந்தாகேளு வாங்கடாசமூலமுந்தான்பேய்புடோலை, காந்திதரும்வேப்பந்தோலாயில்பட்டை கருவேம்புநாவல்நன்னாரிவேரும், சாந்தியாமத்தியாலாசிபித்திதயவானதிப்பிலிமுகிழிலந்தைப்பட்டைவேம்பு, ஆந்தியாங்கரிப்பாலை வாழைமூல மதிமதுரமுத்தக்காசன்யாய்க்கேளே. ௨௮௭

அன்பான தாமரையின் றண்டுமூலம் அருளானசிவதைநவோனை த்தும்வாங்கி, இன்பரசவகையொன்றுபலந்தான்பத்து இடித்துநீ பதின்குறுணிநீரிலிட்டு, முன்போலநாலொன்றாய்க்குறுக்கிவாங்கி மூட்டுவாய்நெய்யநற்குளறுகாலப்பா, வன்பாகவாவின்பால்குறுணி விட்டு மைந்தனேமருந்துவகைமாட்டக்கேளே. ௨அஅ

மாட்டியேயதிமதூரமூமத்தூரான் வாகானஇந்துடனேவெள் ளிலோத்திரம், காட்டவேதிப்பிலியுந்தேவதாரங் காம்புமரமஞ்சள் வெருகுதாது, மூட்டவேயதிறுடையவனயந்தானு முகிழிலந்தைந ன்னாரிநந்திவேரும், வாட்டவேதிரிபலையுஞ்செங்கழுநீர்க்கிழங்கு ம ஞ்சிட்டம்பெருங்கிழங்குவரிசைகேளே. ௨அக

வரிசைபெறும்வெந்தயம்வேப்பலகுகூட வகைக்கங்கேமும்மூ ன்றுவராகன்றாக்கி, வரிசைபெறுகுக்கிலப்பாமூன்றுபத்துவராகனெ டாபாவிலேமயக்கமாக்கி, வரிசைபெறக்கலக்கியேநாலுநாள்தீமந்தா க்கினியாகவேவடித்துவாங்கி, வரிசைபெறக்கழஞ்சியுண்ணக்கொடு த்துப்பூசு மயங்காமல்நசியம்நீவார்த்திடாயே. ௨கூ

வார்த்திடவும்புண்தீரும்வீக்கந்தீரு மகத்தானசிலேற்பனமும் பிளவைதீரும், சீற்றமுறும்பவுத்திரமும்பருவுந்தீரும் சில்லரையாம் வீக்கமொடுகிரந்திதீரும், ஊற்றமுடன்மண்டலந்தானுண்டபேர்க்கு வொழியாதவிரணங்களொழிந்துபோகும், காய்த்திருந்தகாயாசுவா சம்போகக் கழறுகிறேன்றிசைமூலநெய்யைத்தானே. ௨கூக

திசைமூலநெய்.

திசைமூலம்பெருவாகைமுன்னைவில்வந் திறமானபாதிரியுங்க ண்டங்காரி, பிசகாதபெருங்குமிழும்வழுதலையும்நெரிஞ்சி பேரான வேரப்பாபலந்தானாறு, பசுமாகுஞ்சிற்றாமல்லிபோமல்லிவகையொ ன்றுபலமாறுபத்துங்கூட்டி, தசமறவுந்தூளாக்கிப்பாண்டத்திட்டு தண்ணீர்தற்கறுகுறுணிதளரவாரே. ௨கூ௨

தளரவிட்டசுமைங்கேயெட்டொன்றாக்கித் தனிசெய்யுமிரண் டுபடிநானேசேர்த்து, தளரவிடுதிரிகடுகுதிரிபலையிந்துப்பு தனியே லங்கோஷ்டம்விழாவரிசிதானும், தளரவிடாவாலுழுவைசவைச்சனு ப்புதானேனுமஞ்சமஞ்சவராகன்கூட்டி, வளரவரைமூன்றுநாள்சிறுக க்காய்ச்சித் தப்பாமல்நாலாநாள்வடித்துக்கொள்ளே. ௨கூங

செந்நாயுருவிநெய்.

நாலாநாள்வடித்ததிலேகழஞ்சுதாக்கி நாளொன்றுக்கிருநேரந க்கச்சொல்லு, காலனில்லைகாசம்போம்நெஞ்சுநோவும் கிராணிபோ

ம்நெஞ்சினுள்ளேகட்டுப்போக்கும், ஆலமுறுமானந்த வயிரவனைச் சேர்த்து அப்படியேமண்டலந்தானருந்திஞக்கால், வாலைசிவகஞகு ம்வச்சிரதேகம் வசிகரஞ்சேர்நாயுருவிநெய்யைக்கேளே. உகூச

நாயுருவிச்சிவந்ததாய்ச்சமூலம்வாங்கி நறுக்கடாதுலாமொன் றுநிறுத்துநீயும், நேயமுன்றாளாக்கிபெண்குறுணிநீரில் நிலைக்கவே யவித்துப்பின்னெட்டொன்ருக்கி, ஆயமுடனுவினெய்தானறுகால் விட்டு அதற்குவகைகொடிவேலிவேரின்பட்டை, மாயமறுங்கருஞ் சூரைவேர்வெட்டிமுன்னை மைந்தனேமுசுட்டைவேர்சிவதைவேரே

மூலமாறுக்குங்கியாழம்.

சிவதைதிரிகடுகிந்துதிரிபலைநேர்வாளஞ் சேங்கொட்டைதான் றியுமரப்பட்டைதானும், சிவதையெனுமாயினுடன்புங்கம்பட்டை திறமானகொல்லிமல்லிகூடவேதான், சிவதையெனுங்கஸ்தூரிமஞ்ச ள்தானுஞ்சிறுபிரண்டைக்கிழங்குடனேகாட்டுச்சேனை, சிவதையெ னுமரக்கிழங்கு இவைகளெல்லாஞ் சேரடாவகையொன்றுகழஞ்சு மூன்றே. உகூரு

மூன்ருகத்தூக்கியேபாலிலாட்டி முலரவிடுஆவின்பால்படியும் நாலு, மூன்றென்றுநான்குநாள்கொதிக்கவைத்து முறையோடே யைந்தாநாள்வடித்துவாங்கி, மூன்ருகுங்கழஞ்சுநெய்யைக்காலத்தி லுண்ணமூலமுகிழ்மூலரத்தமூலமாறும், மூன்ருகுந்தாதுவிலேபிறந் தமூல முளைசெறியுமாறுவகைமூலம்போமே. உகூஎ

மூலமென்றவுள்மூலமிரத்தமூலம் முழங்கியேசலம்விழுகுமூட் சைக்கெல்லாம், சாலவேகுடிநீரைச்சாற்றக்கேளு சன்ன இலவங்க மொடுஇலாமிச்சம்வேர், சீலமுடனேங்கழஞ்சு இடித்துநீயுஞ் சிலமங் கேபடியொன்றுஆழாக்காக்கி, காலமேகொண்டுவரத்தினந்தானஞ் சு காணுதுமுளைகரையுங்களிம்புகேளே. உகூஅ

மூலமுளைகரையக்களிம்பு.

களிம்பேதுமுகிழ்மஞ்சள் கள்ளிப்பாலால் கரையவேமயனம் போலாட்டிவாங்கி, களிம்பதனைப்பூசிடவுங்கரைந்துபோகுங் கள் ளியிலைபெருக்கிலையு மாவிலிங்கிலையும், களிம்பறவுமிடித்ததனைப்பு கைபிடிக்கக் கரைகிடாதின்னமொருகியாழஞ்சொல்வோம், களிம்ப ன்றிவேர்க்கொம்புவெட்பாலைப்பட்டை கடுக்காய்தான்மூன்றிட்டுக் கியாழம்வையே. உகூகூ

கியாழம்.

வைத்தசெதாருகியாழமுண்ணில்மூலம்போகு மைந்தனேயின் னமுண்டுவரிசைசொல்வோம், வைத்திடுவாய்கியாழம்நீமதூரங்கெர்

தம்மகத்தானமிலவேம்புசிறுகாஞ்சோரிமுல்லை, வைத்தங்கேயெட்டொன்ருய்க்குறுக்கியூட்ட வறள்மூலமுள்மூலம்வாதைதீரும், வைத்திடுவாய்வெட்பாலைபரிசிபட்டை மைந்தனேகெருடபச்சைசமபாகந்தூக்கே. ௲ா

மூலக்கிராணிக்குத் துறுவாதிக்கிருதம்.

சமபாகமாகவேயெடுத்துக்கொண்டு சாந்துபோல்பச்சரிசிக்கழுநீர்தன்னில், சமபாகமாட்டிப்பேதேனில்சேர்த்துத் தானுண்ணத்தீருமடாயின்னங்கேளு, சமபாகஞ்சந்தனமுஞ் செங்கழுநீர்க்கிழங்குந்தனியிலவம்பிசினுமிடைசரியாய்ச்சேர்த்து, சமபாகமேடத்திறுட்டுப்பாலில் தாக்கவேகிராணிவகைச்சளங்கள்போமே. ௲ாக

சளஞ்செய்யும்வகுரிப்புண்ணுருப்புண்ணுஞ் சரீரத்திலுண்டானசார்புக்கெல்லாம், முளங்குளிரத்துறுவாதிக்கிருதங்கேளு முறையேதுவெள்ளறுகுநெய்யென்பார்கள், பளந்திண்ணிப்பாலையிடபட்டைதானும் பாங்காகாலெட்டுப்பலமுந்தூக்கி,விளந்தணிக்கும்வெள்ளறுகுசாரணைநாழிவிட்டிடுவாய்நெய்யதற்குளஞ்சுழக்குதானே.

நெய்விட்டுப்பட்டையைநீயிடித்துத்தானும் நீர்விடுவாயெண்ணாழிநேர்ப்பாய்க்காய்ச்சி, ஐயனேஎண்டுபடியாக்கிக்கொண்டு அப்பனேநெய்யுடனேயாற்றியங்கே, மெய்யிட்டவாவின்பால்படியுமொன்று மேன்மதுரம்பாலைமுகிழிலந்தையிலாமிச்சு, வையிட்டநன்னாரிகொம்பரக்கு மருவுறையுங்குங்கிலியமலர்க்காய்காணே. ௲ாஉ

மலர்க்காயுமுந்திரிகைச்சோமடவிமைந்தனேவெள்ளறுகுகொட்டிமூலம், மலர்க்காயுமுத்தக்காய்சல்லிமூலம் வரிசைபெறுமுளரியிடவனையந்தானும், மலர்க்காயும்வகைக்கங்கேகழஞ்சுமூன்றுவரைந்தாட்டிப்புகட்டிமூன்றுநாள்தான், மலர்க்காவிநாலாநாள்வடித்துவைத்து மஞேன்மணியைச்சதாசிவனைவணக்கஞ்செய்யே. ௲ாச

வயித்தியமுறை.

வணங்கடாகணபதியைச்சித்தாமுத்தர் மகத்தானரிஷிதேவர்ஞானத்தோரை, பிணங்காமலடிபணிந்துகருவம்விட்டுப் போற்றிநீவயித்தியஞ்செய்யுநிதமெய்தாம், இணங்காதபேருடயிணங்கவேண்டாம் இனமறிந்தவுண்மைசொல்லுமில்லாவிட்டால், உணங்காதசமாதியிலேநின்றுகொண்டு வொப்பாதவதிதியெனவொடுங்கியாடே

ஒடுங்காதநெய்ப்பாகக்கழஞ்சுரண்டுஉண்டுவாருச்சூரியப்புண்ணுப்புண்ணும், ஒடுங்காதவீக்கங்கள்ரத்தபித்த முளக்கிராந்திபிறக்

கிரந்திஒடுக்கள்சூலே, ஒடுங்காததீச்சுடுபுண்வீக்கந் தூக்கம்ஓடிப்போ ம்நெய்கொண்டவுடனேயப்பா, ஒடுங்காதபேய்ச்சொறிக்குச்சீந்தி னெய்யை யுரைக்கிறேன்சீதபித்தமென்றும்பேரே. உாசு

பேய்ச்சொறிக்குச் சீந்தில்நெய்.

போானசீந்திலுடன்வேப்பம்பட்டை பேய்ப்புடலும்வகைக்க ந்தேபலம்பத்தாக, சீராகவிடித்ததனைக்குறுணிநீரில் செலுத்தியே யிட்டுநாலொன்றாக்கி, வாராகநெய்த்தாளிக்குள்ளேமைந்தா வாரடா நெய்படிதான்மருந்துசொல்வோம், போானபேய்ப்புடலுமிலாமிச் சம்வேரும் புகழ்மஞ்சள்மரமஞ்சள்அகில்கெந்தங்களே. ௩௭

கெந்தமொடுகச்சோலந்தேவதாரங் கிளர்கோட்டஞ்செஞ்சந் தங்கிளரேலத்துடனே, அந்தந்துவகைக்கப்பாகழஞ்சுரண்டு ஆட்டி யங்கேகொதிப்பித்துத்தினந்தான்மூன்று, பந்தமுடனுலாநாள்வடி த்துவாங்கிப் பாங்காகவிருகழஞ்சுவுண்ணச்சொல்லு, வந்தசொறி கிரங்குப்புண்சட்டைவாங்குமாறுதக்கருங்குட்டம்வாங்கிப்போமே.

மூக்கிலும்வாயிலும்விழுகிற இரத்தவெள்ளுடைப்புக்கு.

வாங்குமடாநசியத்தாலனேகந்துன்ப மருந்தைநான்சொல்லு கிறேன்மயக்கம்நீக்கி, பாங்கானவேப்பந்தோல்கடுகுரோணி பருங் கோட்டைமுந்திரிகைபேரீச்சம்பழமும், பாங்காகமுருக்கம்பூநெல் லிப்பூவும் பருத்திதிப்பிலியரத்தையனைத்தூமைந்தா, ஈங்காமல்நசி யமிடத்தீருங்கண்டா யிரத்தவெள்ளுடைப்புக்குமியம்பக்கேளே.

கேளப்பாசிற்றாமல்லிகீழ்க்காய்நெல்லிகிளர்கண்டங்கத்திரிவே ர்வேப்பம்பட்டை, நாளப்பாகோட்டமுடன்கடுகுரோணிநலமுந்தி ரிபேரீந்துஅத்திதிப்பிலி, தாளப்பாமுருக்கம்பூநெல்லிமுள்ளி நய வானசிறுதேக்குஇலாமிச்சம்வேர், ஆளப்பாஅதிவிடையமிவையோ ரொன்று அப்பனேமும்மூன்றுவிராகன்தூக்கே. ௩௰

பறங்கிப்புண் குட்டரோகம் சூலே இதற்குச்சடைச்சிநெய்.

தூக்கிநன்றாயாட்டியேநாழிநெய்யில் சுவறவேகலக்கிநன்றாய் வடித்துக்கொண்டு, தாக்குவாய்காசெடைதா னுண்ணச்சொல்லில் சாதகத்தைக்கேள்மகனேசாற்றுறோம்நாம், வீக்குமேவெள்ளுடை ப்புமூக்குவாயில் விழுகிறதோரத்தமெல்லாம்வீழொட்டாது, பாக் கியங்கள்செய்தவர்க்கேயிந்நூல்தான் பண்பாகச்சிக்குமடாபற்றிப் பாரே. ௩௧௧

பாரப்பாபறங்கிப்புண்குட்டஞ்சாத்தியம் பரிவானவிசம்படா தாமரைகட்கெல்லாம், சாரப்பாசடைச்சிநெய்யைச் சாற்றுறேநாம் சடைச்சியுடபட்டையங்கேநூலாமுமொன்று, சேரப்பாயெண்குறு ணிசலத்துக்குள்ளே தெரிந்திட்டெட்டொன்ருய்க்குறுக்கிப்பின்பு வாரப்பாயிருநாழியாவிநெய்யைமைந்தனேபடிஒன்றுநிம்பநெய்யே.

நிம்பநெய்யுங்கச்சுந்திராய்சாறும்நாழிவிட்டு அதிமதுரம்பே ய்புடோலு, மின்பமுறும்பொற்கொன்றைமூலந்தானு மியலானபே ய்பிரட்டிவெட்பாலையரிசி, அன்புபெறுமதிவிடையம்பற்படாகம்அ த்திதிப்பிலிவிழாவரிசிவேப்பம்பட்டை,உம்பர்புகழ்கொடிவேலிகடு குரோணியுற்றதேர்ரிலைவேம்புபெருங்குறும்பைவேரே. ௩௧௩

வேருடனேவகையொன்றுவிராகன்மூன்று மீருமலாட்டியந்த நெய்யிற்போடு, வாரமுடன்வடித்தாறிவைத்துக்கொண்டு மாட்டர சகெந்திமற்றேஙிலையிம்மூன்றும், சீருடனேமும்மூன்றுகழஞ்சிதூக்கி சிதறுமற்சாமமொன்றுதூளாயாட்டி, நேருடனேநெய்யிலிட்டு ஆற வைத்து நினைவாகஆளறிந்துநீசெய்வாயே. ௩௧௪

ஆள்பிலமுநோய்பிலமுமறிந்துகொண்டு அப்பனேமுக்கழஞ்சு யிருகழஞ்சுதானும், நாள்பெறநீயுள்ளுக்குமேலும்பூசு நலமாகமூன் றுநாளைப்பைப்பூசி, கோள்படவேகுளிதுவாச்சொன்னுயானுல் குற்றமறும்பறங்கிவிடருநங்களத்து, வாள்படுபுண்போலரிக்குங்கி ரந்திகுலைவாங்காதசிறுசொறிசெம்புண்கள்போமே. ௩௧௫

பறங்கிபுண்-சூலைப்புண் - முடங்கல்இதற்குநிம்பம்.

புண்போகுமிவையெல்லாம்பறங்கிரோகம் புகழ்ந்துசெய்யும்வாக டந்தான்பொய்தானில்லை, புண்போகுஞ்சூலைபோ முடங்கல்தீரும் பேர்மிருகசஞ்சிவிநெய்யைச்சொல்வோம், புண்போகுநெடுநாளைவே ப்பம்பட்டை புரைதீரஐயைந்துபலந்தான்றாக்கி, புண்போக நறுக் கிநீயஞ்சிபோலேபோட்டிடித்துப்பாண்டத்தில்பொருந்தவையே. ()

பொருந்தவைத்துமீர்படியுமிருபத்தெட்டு புரட்டிநீயஞ்சுதின ம்ரவியிலாட்டு, வருத்தியதைப்பிசைந்துமேவடிகட்டிமைந்தா மாட் டடாநாலொன்ருய்வற்றக்காச்சி, விருந்தாகுநெய்படிதானிரண்டுவி ட்டு வேப்பெண்ணைபடிரண்டுமெற்றிலைச்சார், மருந்தாகும்வேளைச் சார்மணத்தக்காளி மைந்தனேநொச்சிச்சாறுத்தாமணிச்சாறே. ()

மணிச்சாறுமுடக்கொத்தான்குப்பைமேனி வகையாறுசாறுப டிமூன்றேமுக்கால், கவிப்பானசிறுகுறிஞ்சிசிவனார்வேம்பு காட்டும

ல்லிபெருமருந்துளசிநொச்சி, தணிப்பில்லாத்தூதுவளையழிஞ்சிவே ளைதயவானநாரத்தைசெங்கத்தாரி, பனிப்பானமுடக்கொத்தானு த்தமதாளி பண்பானமேனிசெருப்படிதாளுமே. ௲௧அ

ஆரப்பாயிவைமூலங்கழஞ்சுமூன்று ஆனபாலிலாட்டிநீயின்ன ங்கேளு, ஓமப்பாவெண்காரஞ்சீனக்காரமுற்றயிருசீரகமுமோமந்தா னும், வேமப்பாசதகுப்பைருடசப்பாலை வெள்ளுள்ளியுடன்பூலாவி ருட்சந்தானும், காமப்பாகுங்கிலியங்காசுக்கட்டி நலமானசண்பக ப்பூநாட்டக்கேளே. ௲௧௯

நாட்டடாகழஞ்சியொன்றுவகையொன்றப்பா நல்லபழச்சாற் றிலாட்டிவாங்கி, ஊட்டடாகளிப்பாக்குபத்துசேர்த்து வுறப்புக ட்டுநெய்யிலேகலரச்சேர்த்து,மூட்டடாவடித்திறக்கிவைத்துக்கொ ண்டு முன்போலச்சூதம்ரண்டுகெந்திரெண்டு, தீட்டடாகுக்கிலஞ்சு கெவுரிகால்தான் திறமானதுரிசியரைக்கழஞ்சுகூட்டே. ௲௨0

கூட்டியேபழச்சாற்றாலாட்டிவாங்கிக் கொடுநெய்யிற்புகட்டிமை ந்தாவைத்துக்கொண்டு, ஊட்டுவாய்நாள்மூன்றுசென்றபின்புவுண் டுவாமூன்போலயுண்மைகேளு, வாட்டியதோர்மூன்றுவகை சூலைப் புண்கள் மாறுதகளர்வாதஞ்சூலைபோகும், நாட்டில்வளர் பதினெட் டுப்பறங்கிதீரும் நலமாகப்பத்தியமாய்க்கொள்ளச்சொல்லே. ௲௨௧

## புண்ணுக்குக்களிம்பு.

சொல்லுகிறேன்புண்களுக்குக்களிம்புதன்னை சூதமடாவாராக ன்ரண்டுலிங்கம்நாலு, வெல்லுகிறேன்கெந்திநாலரையதாகும்வீருக விவைமூன்றுசரக்குமாட்டி, கொல்கிறதோராவினிடவெண்ணைவாங் கி குறையுமட்டுந்தினந்தோறுமாட்டிவாங்கி, செல்லுமடா திசைக் கெல்லாமிகக்களிம்பு தீராதபுண்ணெல்லாந்தீரும்பாரே. ௲௨௨

## திரிகடுகுபலாதிநெய்.

திருமடாகுரைநோயுங்குட்டம்புண்ணுந் திறமாகவுடம்பெல் லாங்களிம்புபூசி, வாரமுடனந்திக்குளிகைசொல்லு மைந்தனேபுண் ணுறுமட்டுஞ்செய்வாய், நேரமுடன்வீரணத்தில்பூசிநீயும் நெரும்பி லேகசிவெடுக்கவாட்டச்சொல்லு, பாரமுடன் திரிபலாதிநெய்யை. மைந்தா பாடுகிறேன்திரிகடுகுதிரிபலையோடாறே. ௲௨௩

ஆறுடனேகொடிவேலிவேரின்பட்டை ஆறியசிவதைநிலைவாம ணக்கன்வேறு, வீறுடையமரமஞ்சள்பொற்கொன்றைக்காயும் வெ ற்றிபுரியதிவிடையங்கடுகுரோணி, வாறுகேள்மஞ்சள் மரமஞ்சள்

பின்னும்வட்டத்திருப்பிமலைதாங்கிவகைக்குமைந்தா, மீருமல்விராக
ன்மூன்றரையாந்தூக்கிவிரைந்தாட்டிநாழிநெய்யிற்கலக்கிக்காய்சே.

தூதுவளைநெய்.

காய்ச்சுமுன்னேகள்ளிப்பாலுழக்குவிட்டுக் கருத்தாகவடித்து
நீமடிக்கச்சொல்லு, வீச்சானகுன்மமுநல்குட்டந்தீரும் வெண்குட்
டம்பாண்டுவிஷைக் கடியுந்தீரும், வாச்சிருந்தசூலைபோ முன்மத்தம்
போகுமைந்தனே தூதுவளைநெய்யைச்சொல்வோம், மாச்சதுலந்தூ
துவளைவேப்பம்பட்டை மகத்தானசீந்திலைக்கொடியுங்கூட்டே.

கூட்டடாபேய்ச்சுண்டைப்பழமுநீதான் கொடுங்கண்டங்கத்
திரியின்வேருந்தோலும், நாட்டடாவகைக்கங்கேகழஞ்சுநாலுநலமா
கவாட்டியேநாழிநெய்யில், ஊட்டடாவடித்திறுத்துவைத்துக்கொ
ண்டு வொருபோதைக்கிருகழஞ்சுவுண்ணச்சொல்லு, பூட்டடாவி
யாதியெல்லாம்நடுங்கிப்போகும் புகலுவோங்கலியாணகிருதம்பாரே

கலியாணக்கிருதம்.

பாரப்பாமேகங்களிரண்டுபுத்தும் படுமவத்தைவிப்புருதி பா
ண்டுபாகம், நீரப்பாகலியாணக்கிருதங்கொண்டு செப்புகிறேன்மரு
ந்துவகைதிறமாய்க்கேளு, நேரப்பாகிலப்பனைவேர்தண்ணீர்மிட்டா
ன் நெருஞ்சியொடுகொடிவேலிநன்னாரிவேரும், சோப்பாவழுதலை
வேர்சிற்றுமல்லி தும்மிட்டிசித்தமட்டிசாரணைவேர்த்திராயே. ௬௨௭

திராயொடுவழுக்குருபாதிரிவேர்வில்வஞ் செப்பரியமுத்தக்கா
சுதாமரையின்றண்டு, திராயிவைகள்வகைக்கங்கேபலத்தைக்கேளு
சோடாமூன்றரைதான்தறித்திடித்து, துராய்தூணிநீரிலிட்டுக்குறு
ணியாக்கிச்சொல்லுகிறேனிச்சாற்றைத்துடர்ச்சிவிட்டு, நீராய்கரும்
புவெள்ளரிக்காய்பொன்னுங்காணிநெல்லிக்காய்பூசனிக்காய்முள்ளி
லவந்தோலே. ௬௨௮

இலவந்தோலிலுப்பையிலைச்சாறெல்லாமென்மகனேவகையொ
ன்றுபடியுமொன்று, நலமானவாவின்பால்படிதானுனு நறுநெய்யும்
படிரண்டுகற்கங்கேளு, பிலமானதோடைவேர்சித்தமல்லிபோரானந
ன்னாரியமுக்குருவேர், மலமாற்றுஞ்சாரணைவேர்நெய்தல்மூல மலர்ந்
ததாமரைவளையமுந்திரிகைப்பழமே. ௬௨௯

முந்திரிகைபேரீந்துகடுகுரோணி முதுவுறையும்வெட்டிவேர்ம
துரங்கோட்டம், மந்தமுறுமிலுப்பைப்பூமலர்க்காய்கந்தம் மாகாளி
க்கிழங்குடனேதேவதாரம், மந்தாரமாஞ்சடாமாஞ்சில்வெட்பாலைய
ரிசி மஞ்சிட்டியதிவிடையமஞ்சள்தானும், பந்தமுறுங்கார்கோலமி
ருசீரகமும் பண்பானசெவ்வியமும்பரிந்துதூக்கே. ௬௩௰

பரிந்தெடுந்துவகையொன்றுகழஞ்சியொன்று பண்பாகவாட்
டியேநெய்யிலிட்டு, எரிந்துநீவடித்திறக்கிவிராகனென்று இயலாக
வுண்டிடவேயிடுக்கமில்லை, கரிந்ததொருமேகங்களிரண்டுபத்துங்கா
ட்டுமுன்னேகரியுண்டகனிபோலாகும், விரிந்தபிரமேகங்களிரண்டு
பத்தும் விப்புருதிவிஷபாகம்பாண்டுபோமே. ருருக

கலியாணக்குழம்புசகலவியாதிக்கும்.

பாண்டுபோங்கலியாணமயனஞ்சொல்லப் பார்மகனேயிம்மாலி
னின்மையாகும், வேண்டியதோர்நெல்லிக்காய்தனிநீராக விரகன்று
பிடித்திறுத்துப்படியும்நாலு, தாண்டுபுகழ்வெள்ளைவெல்லம்பலத்
தைக்கேளு தயவாககாற்றுலாம்நிறுத்துச்சேர்த்துத், தூண்டுகாரெ
ண்ணெயுழக்குசேர்த்து சிருவவதைக் குழம்புபோல் சுண்டக்காய்
ச்சே. ருருஉ

காச்சிவைத்தகுழம்பதற்குமருந்துசூட்டக் காண்மகனேதிரிப
லையும்வெட்பாலையரிசி, வாச்சுபுகழ்திப்பிலியுங் கொடிவேலிவேரும்
மகத்தானவோமமொடுகடுகுரோணி, வீச்சுயர்ந்தகொத்தமல்லி கா
ட்டுதிப்பிலி விழாவரிசிமிளகுசீரகமஞ்சிட்டி, பாச்சுடாவவகையொன்
றுபலந்தானென்று பண்டானதிரிகோபம்பலந்தானெட்டே. ருருரு

எட்டுடனேமுன்மருந்தைசேர்த்துக்கொண்டு இடித்துநீதூளா
க்கிவடியுங்கட்டி, விட்டிடுவாயுழக்கெண்ணெய்பாகிலப்பா விரவிய
துரண்டுகொதிப்பிட்டபின்பு; கட்டுடனேசூரணத்தைத்தூவித் தூ
விக்காய்ச்சடாமயனம்போறகளறிவாங்கி, மட்டுடையபழங்கலத்தி
ட்டுவைத்து மைந்தனேகழஞ்சுண்ணவாறுகளே. ருருச

வாறுகேள்பிரமேகங்காமாலைபாண்டு வளர்குட்டமறுமூலங்கி
றிச்சனமுங்குன்மம், வீறுகவிழுந்துமுறிந்தெலும்புமூறும் விட்டச
ந்துகாலுறுப்புமேவிப்போகும், தேறுதஅரிகுராலுமிடறுகொன்றை
தெளிந்துசுயம்பாடுவான்சித்திபுத்தி, கூறுகவுண்டாகும்வெகுபிலமு
மெய்துங் குறையின்றித்திரைபோகும்நரையும்போமே. ருருடு

நாட்பட்டசுரத்துக்குமுந்திரிகைநெய்.

போமப்பாநாட்பட்டசுரத்துக்கெல்லாம் புகழானமுந்திரிகை
நெய்யையுண்ணில், ஆமப்பாமுந்திரிக்கைவெட்பாலையரிசி யத்திதிப்பி
லிகெந்தம் அதிவிடையம்நெல்லி, வேமப்பாநிலவேம்புமிலாமிச்சம்
வேரும் வில்வவேர்வகைக்கங்கேகழஞ்சுதூக்கி, தாமப்பாதனிநீரா
லாட்டிவாங்கித் தாக்கடாவாவினெய்யிற்படிதானென்றே. ருருசு

படிவிட்டநெய்க்குள்ளேதண்ணீர்நாழி பாய்ச்சிநீமந்தாக்கினி
யில்வைத்துநீயும், அட்டிவிட்டநீர்வற்றில் பதத்தைநோக்கி யப்

பணைவடித்திறாத்தூக்கமுஞ்சுமூன்றா, குடிகொண்டசுரம்போகுங்கா
ந்தல்போகுங்கூரானவயிறெரிவுமிருமல்போகு, முடியற்றசெண்டை
போஞ்சொரியும்போகு முதுசொல்லாந்திரிகோபவிபரங்கேளே.
விபரங்கேள்சந்தனமுஞ்சிவதைதானும் வெள்ளைக்குங்குலிய
மிவைதிரிகோபமாச்சு, விபரமாய்த்தெரியாதமருந்தையெல்லாம்மே
ன்மக்கள் சொலக்கேட்டு விளம்பிக்கொள்வாய், விபரமறியாதவர்க
ளாகாசகெருடன் வீழனபழுபாகல்கொல்லன்கோவையென்பார், வி
பரமாய்த்திப்பிலிநெய்யதனைக்கேளு விடாதசுரம்போவதற்கு விள்
ளுறேனே. ௫௫௮

திப்பிலிநெய்.

விள்ளுறேன்திப்பிலியுங்கடுகுரோணி வெட்பாலையரிசியுடன்
கீழ்க்காய்நெல்லி, கள்ளமறும்வில்வவேர்வேப்பம்பட்டை கடுதான்
றிக்கெந்தமடாகோடைதானும், தெள்ளுபுகழிலாமிச்சமுந்திரிகைப்
பழமுஞ் சிறியதொருசண்பகமுமதிவிடையந்தானும், துள்ளுநீவ
கைக்கங்கேகாசு தூக்கிச் சுகமாகத்தண்ணீரிலாட்டிவாங்கே. ௫௫௯
வாங்கினதோர்மருந்துக்குத்தண்ணீர்நாழி வாக்காகநறுநெய்
தானாழிவார்த்து, பாங்காகமந்தாக்கினியைமூட்டிப் பதமாகவடித்
திறாத்தூக்கமுஞ்சிரண்டு, தேங்காததேன்குத்திநெய்யுஞ்சேர்த்து தி
ன்றிடவேசுரம்போகும்விக்கல்போகும், தாங்காதவுழலைபோம் அ
ரோசிகம்போந் தலைநோயும்பிரமேகந்தணியுந்தானே. ௫௬௰

சன்னிசுரத்துக்குச் சீதேவிநெய்.

தணிந்திடவேசன்னிமுதல்சுரத்துக்கெல்லாஞ் சாற்றுகிறேன்
சீதேவிசெங்கழுநீர்நெய்யை, துணிந்தெடுப்பாய்நீதேவி சாறுபடிநா
ழு சொல்லுகிறேன்மஞ்சிட்டிதாமரையின்பத்திரி, கணிந்தேலமிலவ
ங்கங்கடுகுரோணி கனத்தகோட்டம்நன்னாரிமதுரங்கெந்தம், மணி
ந்தசரக்கோரென்றுவிராகன் தூக்கி மைந்தனேயாட்டியதைவடித்து
க்கொள்ளே. ௫௬௧
வடித்ததொருநெய்யதனைக்கழஞ்சியுண்டு மைந்தனேமேலுமந்
தநெய்யைப்பூசில், கடித்தசுரமெண்பத்துநாலுந்தீருங் கண்குளிரு
ம்புண்தீருங்கலருஞ்சித்தி, படித்தினியாமின்னமொருநெய்யைசொ
ல்வோம் பண்பாகச்செங்கழுநீர்சாறெண்ணாழி, விடித்தேலமிலவங்
கமதிமதுரங்கோட்ட மிக்கசிட்டிசண்பகப்பூகடுகுரோணியே. ௫௬௨
ரோகணியுஞ்சந்தனமும்வெட்டிவேரும் நுணுக்கமுறுநன்னாரி
நீர்வள்ளிக்கிழங்கும், நாகமுறுமிலாமிச்சஞ்செங்கழுநீர்க்கிழங்குமந

ரிமிரட்டிமுத்தக்காசுவகைக்கோர்காசு, நேகமுடன் றாக்கியதையா ட்டிவாங்கி ரேகிப்பாய்மூன்றுபடிநெய்யிற்குள்ளே, ராகமுறக்காய் ச்சிநீவடித்துக்கொள்ளு நலமாகச்சுரங்கள்முதல்சன்னிபோமே.

காடாசுவாசத்துக்கு ஆடாதோடைநெய்.

போமப்பா களங்கமெல்லாம் போவதற்குப் பூட்டுகிறே னுடா தோடைநெய்யைத்தானே, வேமப்பாகண்டவுட னோய்களெல்லாம் வெட்டியறுந்தோடைக்காற்படிதான்ரண்டு, நாமப்பாபசுவின்பால் படிதான்ரண்டு நறுநெய்தான்படியிரண்டுஅத்திதிப்பிலி, ஆரப்பா திப்பிலியுங்கொடுவேலிவேரும் அடைவாகயிந்துசுக்கு யெவாச்சார ங்காணே. ௲௪௪

எவாச்சாரஞ்சத்திபிடசாரந்தானு மிவையெல்லாமோரொன் றுகழஞ்சியொன்று, அவாச்சாரமின்றிநீயுடனேயாட்டி யப்பனேப த்ததனிலேவடித்துவாங்கி, மூவச்சாரமுற்றிரண்டுதேசகால மொவ் வொருகழஞ்சியாயுண்ணச்சொல்லு, மெவச்சாரமந்திக்குக்கழஞ்சு பாதி யென்மகனேயுண்மைதனையியம்புறேனே. ௲௪௫

இயம்பவேநெஞ்சுவலிகுறுகுறுப்பு யீளைவலிகிறுகிறுப்புகாயா சுவாசம், இயம்பவேயெரிகுரலும்பித்தப்பாண்டு யெழுமூலமுள்மூ லமகவைவெப்பு, இயம்பவேபழஞ்சுரமும்வெப்புப்பார்வையியல்பா னவசிரண்டுமக்கினிமாந்தம், இயம்பவேபறந்துவிடும்விபரங்கேளுஇ வைகளெல்லாம்நறிக்கியியல்புகூட்டே. ௲௪௬

நாட்பட்டசுரத்துக்கு முலைப்பால்நெய்க்கிருதம்.

கூட்டடாவேர்க்கொம்புகியாழம்வைத்துக்கொடுத்திடவேநோ ய்களெல்லாஞ்சித்தியாகும், நீட்டடாமுலைப்பால்நெய்சஞ்சீவியப்பா நெறியாகமுலைப்பால்தான்படியும்ரண்டு, நாட்டடாகொடுப்பைவேர் வெள்ளரியின்விரையும் நல்லதொருபூசனிக்காய்விரையுஞ்சேர, மூ ட்டடாநெல்லிமுள்ளிமதுரமப்பா முறையாகவிருகழஞ்சு வுலரவா ட்டே. ௲௪௭

ஆட்டியதோர்மருந்துக்குள்நெய்யும்நாழி யடைவாகவிட்டுநீவ டித்துவைத்தா, ஊட்டுவாய்கழஞ்சிரண்டுமேலும்பூச வுடல்வெக்கை சுரவெக்கையுடம்புலர்த்தல், வாட்டிவருமெலும்புருக்கிகளைகள்கா சவாட்சியொடுபிரமேகம்வெட்டையோடு, காட்டியேமறைத்தாபோ ல்காணுதோடுங் கருத்தாகயின்னமொருநெய்யைக்கேளே. ௲௪௮

ஆடாதோடைக்கிருதம்.

கேட்டிடவேநாட்பட்டசுரத்துக்கெல்லாம்கிருதமடாதோடை வேர்கிழக்காய்நெல்லி, வேட்டிடவுங்காட்டுமல்லிவேளைகுப்பை வெ

லிப்பருத்தியொடுகுப்பைமேனி, நாட்டில்வளர்வழுதலைவேர்நத்தை
ச்சூரி நலமானமருட்கிழங்குஅப்பைமூலம், ஊட்டுவாய்வசம்புள்ளி
க்கஸ்தூரிமஞ்சள் உற்பனஞ்சேர்நல்லபாம்புகண்டந்தானே. ௫௪௯

கண்டமொடுவிராசனங்கேழுன்றுதூக்கி கலராட்டிநாழிநெய்
யிற்கலந்துகொண்டு, கண்டமெனும்நல்லெண்ணெய்ரண்டெண்ணெ
ய் கலந்திடுவாய்வகைரண்டுபடிதானென்று, கண்டிதமாயிவையெல்
லாங்காயும்போது கருங்குங்கிலியம்ரண்டுகாசுதூக்கி, கண்டிடமாய்
நிம்பபழச்சாரூற்றக்கேளு கனிந்தபழமஞ்சங்கேபிழிந்துஆட்டே.

வெள்வேல்நெய்.

ஊட்டியேவடித்தப்பாவைத்துக்கொண்டு வுள்ளுக்குக்காசெ
டைதானுண்ணச்சொல்லு, நாட்டியேமேனுக்குந்துவாலைபோடுநாட்
பட்டசுரந்தணியுமின்னமொன்று, வீட்டியேவேல்நெய்யைச்சாற்ற
க்கேளு வெள்வேலம்வேருடனேகளர்ச்சிவேரும், நீட்டியதோர்பூளை
வேர்நாயுருவிவேரும் நேரானவிஷ்ணுகிரந்திவேரே. ௫௫௧

சந்தனாதிநெய்.

வேருடனேவசம்புள்ளிசமனாய்க்கேளு மீறுமற்கழஞ்சியைந்து
ஆட்டிவாங்கி, ஆரவேநாழிநெய்யிற்கலந்துகொண்டு அப்பனேகடித்
திரித்துக்கழஞ்சுகொள்ள, வீரமுள்ளபழஞ்சுரங்களனைத்துந்தீரும்
வெற்றியுள்ளநெய்யாச்சுதயிலங்கேளு, தாருறைந்துநவ்வொழுகுஞ்
சந்தனாதி தனிநெய்யைச்செப்புகிறேன்சார்ந்துகேளே. ௫௫௨

சார்ந்துகேள்சந்தனமும்வெள்ளிலோத்திரந் தனிமதுரமுந்திரி
கைமுக்கழஞ்சு, சாந்துபேசலிவையெல்லாம்பாலிலாட்டி தண்ணீர்
தான்படியொன்றில்கலக்கிக்கொண்டு, சார்ந்துநின்றுநெய்தானாழி
யூற்றி தபவாகவடித்திறுத்துதலையிற்றேய்த்து, சாந்தமாயரப்பிட்டு
முழுகச்சொல்லு தாபசுரம்பூதசுரந்தணியும்பாரே. ௫௫௩

சந்தனாதித்தயிலம்

பாரப்பாஇன்னமொருசந்தனாதி பகருகிறேன்மூக்குருவேர்பொ
டியும்நாழி, சேரப்பாசித்தாமுட்டிப்பொடியும்நாழி சிறப்பானகொ
ம்பாக்குப்பொடியும்நாழி, நேரப்பாயிம்மூன்றுபதக்குநீரில் நீயிட்டு
நாலொன்றாய்க்குறுக்கிவாங்கி, ஆரப்பாநல்லெண்ணெய்நாழிவிட்டு
அப்பனேகுழம்புமோர்நாழியூற்றே. ௫௫௪

மோர்விட்டுநன்னாரியரத்தைகோட்ட முகிழ்மதூரஞ்சதகுப்பை
கடுகுரோணி, வாரிட்டகச்சோலந்தேவதாரம் மஞ்சளொடுமரமஞ்ச
ள்கஸ்தூரிமஞ்சள், மாரிட்டபெருங்குரும்பையமூக்குருவேர் மஞ்சி

ட்டிகெந்தமொடுநாகப்பூவும், நேரிட்டவகையொன்றுவிராகனென்று நிறுத்திநீயாட்டியதைக்கலக்கிக்காய்ச்சே. ௩௫௫

## ஆடாதோடைத்தயிலம்மதுக்காளித்தயிலம்.

காய்ச்சப்பாமூன்றுநாள்கொதிக்கச்செய்து களரவேநாலாநாள் வடித்துமைந்தா, தேச்சப்பாவுடம்பெல்லாம்நசியம்பண்ணு தீராத சுரந்தணியுமுடம்புந்தேறும், பாச்சப்பாதோடைவேரெண்ணெ தன்னைப் பாடுகிறேன்மதுக்காளித்தயிலமென்பார், வீச்சப்பாயதிமதுரம்வேப்பம்பட்டை வியிலித்தோல்வேம்பினிடவித்துவாங்கே. ௩௫௬

வாங்கடாதிராய்வேருமத்தம்வேருமகத்தானகுன்றிவேர்மேனிவேரும், பாங்காகுமிந்துப்புமிவைகளெல்லாம்பரிவுடனேவிராகனென்றுதூக்கிக்கொண்டு, ஆங்கடாதோடையிலைச்சாறுவிட்டு ஆட்டிநீயச்சாறுநாழிவிட்டு, தேங்காதநல்லெண்ணெய்நாழிவிட்டு தீயிட்டுப்பதமாகவடித்துக்கொள்ளே. ௩௫௭

## சீதசுரத்திற்குமோரெண்ணெய்.

வடித்திறுத்ததயிலத்தைமேலுமிட்டு மைந்தனேயுள்ளுக்குக்கொள்ளச்சொல்லு, பிடித்ததொருசன்னிபோஞ் சுரமும்போகும் பேர்பெரியமோரெண்ணெசீதம்போகும், தடித்தமோர்நாலுபடியெண்ணெய்நாழிசார்பானசித்தாட்டிவேர்த்தோலுங்கூட, படித்தகோட்டம்வேர்க்கொம்புபொன்மெழுகுதானும் பாங்கானமுசுட்டைவேர்மதுரமிந்தே. ௩௫௮

இந்துப்புமஞ்சளொடுதேவதார மியலானநன்னாரிமாகாளிமூலம், சிந்துபுகழ்பெருங்குரும்பைதக்கோலம்புட்டில் சீந்திவேரிலாமிச்சஞ்சிறுகீரைவேரும், சந்ததுறந்தகரமொடுகச்சோலமேலஞ் சாதிக்காயிலவங்கப்பத்திரிதானும், பந்தமுறுஞ்சாரணைவேர்திப்பிலியின்மூலம் பாங்காகவகைக்கங்கேகாசுதூக்கே. ௩௫௯

## சிதேவித்தயிலம்.

காசிடைதானிறுத்தங்கேமோரிலாட்டிக் கலக்கிநீகாய்ச்சியேவடித்துமைந்தா, நேசமுடன்கழுத்துக்கீழ்தேய்த்துப்போடு நிமிஷத்திற்குளிர்காய்ச்சல்பித்தருட்சை, பாசமுறுமந்தசுரஞ்சீதருட்சைபலசுரமும்விஷசுரமும்பறக்குங்கண்டாய், தேசமறுஞ்சிதேவித்தயிலங்கேளு தீராதசுரமெல்லாந்தீருங்காணே. ௩௬௰

காணப்பாசிதேவிச்சாறுநாழி கலரவார்சீந்திச்சாறதுவும்நாழி, ஊணப்பாயெண்ணெயுரிநெய்யவ்வண்ண முத்தவதிமதுரமொடுதேவதாரம், பூணப்பாநாகப்பூகோட்டங்கெந்தம் புகழ்பெறவேமஞ்சிட்டிசதகுப்பைதானும், மூணப்பாவெட்டிவேர்குருக்கத்திப்பூவு முயர்மாஞ்சில்அகிற்கட்டைகொம்பாக்கே. ௩௬௧

அரக்குடனேவிலாமிச்சம்தாமரையின்வளையம்அதினரும்புசெஞ்சந்தமேலந்தானும், இரக்கமுறாநன்னாரிகச்சோளக்கிழங்குஏலமொடுலவங்கப்பட்டைபத்திரியும், கரக்கமலநெய்தல்வேர்கடுகுரோகணிகானசித்தாமட்டிவேர்பெருங்குப்பை, திரக்கவேயாத்தையுடன் திப்பிலிதானுஞ்சேரவேவகைக்கொவ்வோர்காசுதூக்கே. ௲௬௨

செங்கழுநீரெண்ணே.

தூக்கியேபால்விட்டுஆட்டிவாங்கி சூட்டியெரிமந்தாக்கியைமூட்டி, தாக்கியேவடித்திறுத்துவுடம்பிற்போடு சகலசுரமேலெரிப்புதாகம்போகும், தேக்கியேயின்னமொருமார்க்கங்கேளுசீதேவிசெங்கழுநீர்சாறுநாழி, நீக்கமில்லாநெய்யுடனே யெண்ணெநாழி நீசேருமேல்மருந்தைநிரைக்கிறேனே. ௲௬௩

நிரைப்பானவெட்டிவேர்கடுகுரோணி நேர்கெந்தியதிமதுர னிரைதானொன்றாய், அரையப்பாமும்மூன்றுகழஞ்சுதூக்கிப்பனேகலக்கியேவடித்துநீயும், கரையவேயுள்ளுக்குமேனுமூட்டு கடுஞ்சுரம்விஷசுரமுங்காணுதோடும், புரையுடையநெடுஞ்சுரமும் வெட்டைபோகும் பூட்டுகிறேனின்னமொருமோரெண்ணெய்கேளே. ௲௬௪

மோரெண்ணெய்.

இன்னமொருமோரெண்ணெய்மோர்படிதானறு இயலானபழங்காடிபடிதானென்று, பின்னமில்லாநல்லெண்ணே படிதானொன்றுபேர்பெரியசித்தமட்டிவேர்பலந்தானறு, சன்னமா யிடித்ததற்குள்நாலுபடிசலத்தைதாக்கடாநாலொன்றாய்தனித்திறுத்து, சொன்னபடிஒன்றாய்க்கலக்கிகறபஞ் சூட்டுகிறேன்வகையாகச்சூட்டுறேனே.

சூட்டுகிறேன்குறுந்தொட்டிவேர்த்தோலிநன்னாரிசுருக்குடையமுசுட்டைவேர்முத்தக்காசு, நீட்டியதோர்சீந்தில்சாரணை விலாமிச்சுசிறுகீரைவேருடனேயமுக்கருவேர், மூட்டியதோர்கோட்டமொடுஇந்துவதிமதுர மோய்குப்புகழ்வேர்க்கொம்பு செவ்வள்ளிக்கொடியும், நாட்டியதோர்பொன்மெழுகுகச்சோலமேலம் நல்லமஞ்சளிலவங்கபத்திரியும்நாட்டே. ௲௬௫

பத்திரியும்சாதிக்காய்சிற்றரத்தைகிராம்பு பழந்தேவதாரமொடுதிப்பிலியின்மூலம், முந்திரியுங்கடல்நுரையும்வகைக்குமொருகழஞ்சு முறையோடேமோர்விட்டிஆட்டிவாங்கி, இத்தனையுந்தானியிலேகலக்கியப்பாயியல்பாகமூன்றுநாள்கொதியுமிட்டு, வத்தியதுபதம்பார்த்துவடித்துவாங்கிவளமாககழுத்தின்கீழ்தேய்த்தாற்போமே.

ஆறப்போட்டரைக்கடிகைக்கப்பால்நீயும் அழகானதலைக்குமந்தயெண்ணேயிட்டு, நேறப்பாசீயக்காயரப்புதேய்த்து சிந்தையில்

லாவெங்கீரீல்முழுகச்சொல்லு, மாறப்பாவொன் றுமில்லைவிஷசுரங்க
ள்மாறல்மகாவாதசுரம்வெட்டைபித்தங்காந்தல், நீரப்பரயத்திசுரங்
குளிர்தாபசோபம்நெஞ்சரிப்பு அளிசுரங்கள்பலசுரங்கள்போமே.()

அரக்குமோரெண்ணெய்.

பலசுரங்கள்போவதற் கின்னமோரெண்ணெய் பகருகிறேனரக்கு
மோரெண்ணெய்மைந்தா, சொல்லரியகுறுந்தொட்டிவேர்பலமோர
ஞ்சுதூளாக்கியஞ்சபடிசலத்திலிட்டு, நில்லாமலொன்றாக்கிகொம்பர
க்குநிறுத்துவிடுரண்டரைபலத்தையொருகிளியாய்க், கலவரமில்லா
சலமூன்றுமரைப்படியாய்காச்சடாவமுக்கருவேரஞ்சுபலமே. ()

அஞ்சுபலம்வேரிடித்துதூளாயாக்கி யதற்குமொருமூன்றுபடி
சலமும்விட்டு, பஞ்சறவேயக்தக்கியாழநீரும் பாரடாயரைப்படிதா
ன்பழமோர்சேரு, வஞ்சமில்லாசாறுபடிஎண்ணெய்நாழி மருந்துவ
கைவர்க்கத்தில்வரிசைசொல்ல, தஞ்சமுள்ளியெட்டியிலாமிச்சஞ்சி
ந்தில் தனிமுசுட்டைகுறுந்தொட்டிவேருங்கூட்டே. ௩௭௰

கூட்டடாநன்னாரிபுழுதைவேரும் கூறறியசாரணையுஞ்சிறுகீரை
வேரும், நாட்டடாகோட்டமதியதிமதுரமிந்துசுக்கு நல்லமஞ்சள்க
ச்சோலமேலமிலவங்கம், பூட்டடாசிற்றரத்தைதிப்பிலியின்மூலம் பு
கழ்சாதிக்காய்தகரஞ்செவ்வள்ளிக்கொடியும், மாட்டடாதேவதார
மிலவங்கப்பத்திரி மகிழ்வாகக்கழஞ்சொன்றாய்மோரிலாட்டே. ()

ஆட்டியேகலக்கியோர்தாளிசேர்த்து அடுப்பேற்றிமூன்றுநாள்
கொதிக்கவைத்து, திட்டியேநாலாநாள்வற்றக்காச்சி சீராகும்பதங்
கண்டுவடித்திறுத்து,போட்டியேயில்லாமல் நான்குநாளுக்கொருநா
ள்பூசியேமுழுகிவரப்போகுநோய்கள், ஊட்டியாய்வந்தபல சுரங்க
ள்வெட்டைகூடு மோடுமேகடலினுரைத்தயிலங்கேளே. ௩௭௨

கடல்நுரைத்தயிலம்.

கேளப்பாகடல்நுரையுங்கோட்டமஞ்சள் கெந்தமொடுபொன்
மெழுகுவிலாமிச்சம்வேர், வாளப்பா சதகுப்பைமுத்தக்காசு மஞ்சி
ட்டியினுப்பைப்பூகடுகுரோணி, வேளப்பாபிசின்கம்பிபெருங்குரும்
பைவெட்டிவேரிந்துவுடன்வேர்க்கொம்புதானு, மாளப்பாஒவ்வொ
ன்றுகாசுதூக்கிமாண்பாகநீமோரிலாட்டுஆட்டே. ௩௭௩

சுரத்துக்குவெருகெண்ணெய்.

ஆட்டியேயெண்ணைபடியொன் றுவிட்டுஆறுபடி தண்ணீர்விட்டடு
ப்பிலேற்றி,நீட்டியேவடித்திறுத்துவுடம்பிற்றேய்க்க நிலையானசுரங்

தீருங்காந்தல்தீரும், வாட்டியதோருடல்நோய்கள் பொறுத்துபோகும் வாயினில்நீரூறல்நாவறட்சிபோகும், நாட்டியேவெருகென்ணைசுரத்துக்கெல்லாம் நல்லபிரயோகமடாநாடிப்பாரே. ௲எ௪

நாடினதோரெருக்கம்வேர்சித்தாமுட்டிநல்லசிறுகாஞ்சொறியவுரிவேரும், பீடுபுகழ்சீதேவிதுளசிநொச்சி பெருங்கரந்தையிவைவகைக்குப்பலந்தான்பத்து, நீடிதனைத்தூளாக்கிப்பாண்டத்திட்டு நீரதர்க்குஅறுகுறுணிபிரம்பவிட்டு, வாடியனவூட்டியேயெட்டொன்றுக்கி வாங்கிநீகோலரக்குக்கியாழங்கேளே. ௲எ௫

கோலரக்குபலமொன்றுநாழிநீரிற்குவித்திட்டுப்படியாகவடித்துக்கொண்டு, காலரக்கெண்ணெய்ப்படியெண்ணெய்விட்டு கலந்தமோரிருகுறுணிகரைவிட்டு, வேலரத்தையதிவிடையமுத்தக்காசுவெட்பாலையரிசிகோட்டம்வாய்விளங்கம், வால்மஞ்சள்திரிகடுகுகொடிவேலியோமம் மரமஞ்சள்கருவேம்புகடுகுரோணிதானே. ௲எ௬

கடுகுரோகிணியகிலுங்கெந்தஞ்சிட்டிகஸ்தூரிமஞ்சளொடுலவங்கப்பட்டை, அடுகுசதகுப்பைசெவியம்நற்றக்கோல மப்பனேவெள்ளுள்ளிதிப்பிலியின்மூலம், தடுகுபுகையூறல்சிறுதேக்குதானுந் தனித்தனியேகாற்பலமுந்தானேதூக்கி, மூடுகவேகொதியினாலாட்டிவாங்கி முறையோடேநாலுதினங்கொதிக்கச்செய்யே. ௲எஎ

கொதிப்பிட்டுவைந்துநாள்வடித்துமைந்தா கூசாமலுள்ளுக்குக்கொள்ளச்சொல்லு, கதிகெட்டமாறல்போமுறைக்காய்ச்சல்போங் கடுங்காய்ச்சலதிசாரசுரமும்போகும், விதிகெட்டதேகவீக்கசுரமும்போகு மிக்கவசீரணசுரமும்பூதசுரம்போகும், பதிகெட்டவிஷசுரமும்பசைசுரமுமிவற்றுலேபறந்துபோமே. ௲எஅ

பறந்துபோம்சீதசுரமதிலோர்பாகம் பாடுகிறேன்வெருகிலையுந்தண்டுமூலம், சிறந்தவில்லைசாரணைவேர்போராமட்டி சித்தமட்டியமுக்குறுவிஷ்ணுமூலி, கறந்தபடிபலமொன்றுயிடித்துவாங்கிக் காய்ச்சடாஇருகுறுணிசலந்தான்விட்டு, மறந்திடாதெண்ணெய்ப்படியொன்றுவிட்டு மகிழ்காலிவெள்ளையிடபால்படிதான்ரண்டே. ௲எ௯

பால்விட்டுஆவின்மோர்படியும்ரண்டு பாச்சியேமரமஞ்சள்மதுரஞ்சிட்டி, சாலிட்டயிலாமிச்சம்நன்னாரியரத்தை சந்தனமுங்கூவிளத்தின்சதையுமிக்க, சேலிட்டகோட்டமுடன்திரிகடுகுபலையும்தேவதாரக்கட்டைசேரநீயும், கோலிட்டவிராகனென்றுவகைக்கித்தூக்கி குழையாட்டிவகைக்குமைந்தாகொள்ளச்சொல்லே. ௲அ௰

வெள்ளைக்காரன்வெருகெண்ணெய்.

கொள்வதல்லால்நசியம்விடுமேலும்பூசுகுளிர்காய்ச்சல்சீதசுரம் குதித்துச்சாடும், விள்வதொன்றுவெருகெண்ணெ வெள்ளைக்காரன் விதித்தபடிசமூலந்தான்துலாமுந்தூக்கு,கள்வதன்றிசித்தமட்டிபே ராமட்டி கடுஞ்சீலவில்வவேரமுக்குருவேர், கள்வதென்னசமூலமப் பாவிஷ்ணுமூலிசாரணைவேர்சிந்திலிடதண்டுகாணே. ௫௮௧

தண்டேனேபலமஞ்சுவகைதானென்று தறித்திடித்துத்தூணி நீர்தன்னிற்போட்டு, பண்டிடவேகுறுணியாய்க்குறுக்கிவாங்கிமாட் டுநீகுறுணியெணணையதற்குள்விட்டு, பண்டுவைத்தபழந்தயிர்நீர்ப டியும்நாலுபாச்சியதில்மேல்மருந்தைபகரக்கேளு, தின்றிடவேவெட் டிவேர்மதுரங்கெந்தந்தேவதாரத்துடனேமுத்தக்காசே. ௫௮௨

காசுடனேகுங்கிலியந்திராயவேர்குக்குல்கனத்தசித்தமட்டிவே ர்திரிகடுகுமிவைகள், வீசுபலமோரொன்றுவகையுமொன்று விரைந் தாட்டிமூன்றுநாள்வடித்துக்கொள்ளு, ஆசிடவேமேலுமிடவுள்ளு ங்கொள்ள் வப்பனேநீகொடுப்பாயத்திருட்சை, தேசுடையசாதுர க்கந்திரியருட்சை தேசுரம்பூதசுரஞ்சேரப்போமே. ௫௮௩

குன்மத்துக்குக்கொம்மட்டிக்குழம்பு.

சேராதகுன்மங்களைத்தும்போகச் செப்புகிறேன்கொம்மட் டிக்குழம்புதன்னை, ஆரவேகொம்மட்டிக்காய்ச்சாறுநாழியப்பனேச ம்பீரச்சாறுநாழி, வாரமுடன்வெள்ளுள்ளிநொச்சியிஞ்சிவகைக்குநீ சாறுபடிநாழிவாங்கி, பார்புகழுமஞ்சுபடியொன்றாய்க்காய்ச்சி பாச் சுதற்குச்சூதமொடுலிங்கந்தானே. ௫௮௪

லிங்கமொடுபெருங்காயமிந்துப்போமம் நேரானவெண்காரங்க டுகுமஞ்சள், லிங்கமொடுவெந்தயமுமிளகுகாந்தம் நேர்வாளமோ ரொன்றுகழஞ்சுமூன்று, லிங்கமுறஆட்டிநீபாகிற்சேர்த்து நெருங் கவேவிடாமலேகிண்டிக்கிண்டி, லிங்கமுறும்பழம்புளிபோலிறங்கு மைந்தா நினைவறிந்துவுடலறிந்துவுண்ணச்சொல்லே. ௫௮௫

உண்ணுவதுபனைவெல்லம்நல்லவெல்லம் மூட்டிடுவாய்தூதுள ங்காய்ப்பிரமாணத்தில்,உண்ணயிலேகுன்மம்போம்பெருவயிறுபோ குமுத்தரத்தில்நீராமைமகோதரமும்போகும், உண்ணயிலேபீலிகை யும்வெப்பும்பார்வையுயர்கோவைவல்லியமுங்கவுசிதானும், உண்ண யிலேவாய்வுவென்றசென்மம்போகு முறைக்கிறேன்கும்மட்டிக்காய் ச்சூரணத்தைக்கேளே. ௫௮௬

இன்னங்கேள்மாதனேயின்பழச்சாறுகுமிதினுலேநோயொழிவு மெரிவுடனேயிரத்தஞ், சன்னையாய்வருகின்ற தாபமொடுசோபம் சாத்தியவித்தந்தலைநோயத்திசுரம்வாய்வு, பண்ணுவிஷசுரமாகமீனை யோடிருமல் பலசுரமுமுப்பிசமும் நெஞ்செரிப்பும்பறக்கும், நன்ன யஞ்சேரசுவகெந்தி சூரணத்தை நாட்டுவேன் புலத்தியனே நயந்து கேளே. ௭௫௱

அசுவகெந்திசூரணம்.

கேளப்பா அமுக்கிராவேர்பலமூன்றுகொடியானசுக்கேலங்கூ கைநீறும், கேளப்பாவகையொன்றுக்கொன்றரையாம்பலந்தான்கிராம் புசிறுநாகப்பூ கிளாப்பலந்தானிரண்டு, கேளப்பாதிப்பிலியோர்பலந் தானெட்டுகிருபைபெறமிளகுநால் பலமுங்கூட்டு, கேளப்பாவிதை யெல்லாமிடித்ததூளைக் கெட்டியாய்வடிகட்டிசீனியிட்டுக்கிண்டே.

சீனியிட்டுநாற்பலமுங்கலந்துசூரணந்தான் செப்புவேனறுபா ணந்தேனிஞ்சிச்சாற்றில், சீனியிட்டுக்கிண்டியது வெண்ணைமுத்தக் காசில்செலுத்துவதுவெருகடிதான் தினமும்ரெண்டுபோதுசீனியிட் டுக்கிண்டியேமச்சமுனிஐயா தெளிவானபுத்தியனேஞானசீலா,சீனி யிட்டுக்கிண்டியது மண்டலந்தானருந்த தீருகிறநோய்கேளு மந்த முதல்வாய்வே. ௭௫௩

வாயுவுறும் வலிதீரும்ரோகிதீரும் வாதபித்தசிலேத்துமத்தின் வகையுந்தீரும், மாயுகின்றவுப்பிசமும்நெஞ்செரிப்புபித்த மரிசூரனு ம்வாந்திக்ஷய மீனையோடிருமல், நேயமுடனுண்டுவர நின்றுபோமப் பா நில்லாதநோய்கிருணி குன்மம்நின்றிடுமே, சீயிரத்தகிருணிகுன் மம் குக்குடசூரணத்தைச் செப்புவேன்கருங்கோழி திறமானதொ ன்றே. ௭௫௰

குக்குடசூரணம்.

திறமானகோழியொன்று கட்டலையுந்தள்ளி சித்திரமாய்வயிற் றிலுள்ளபாண்டத்தைப்போக்கி, உறவாகமேல்மருந்து கூட்டவகை கேளு வுத்தமனே திரிகடுகு வெள்ளிப்பருப்பு, நிறையாக வகையொ ன்றாகழஞ்சியுமேபத்து நேயமுள்ளவளையவிந்து கல்லுப்புநோய், குறையாமலேயஞ்சுகழற்சிதன்னைக் கூட்டுகிறேனின்னவகை கூறு வேனே. ௭௫௧

கூறானபருத்திவிரைபருப்புகொள்ளு குமுறிவெருகடுகுகருவே ப்பிலையின்பொடியும், நீராகப்பொடித்தபொடிவகைக்காழாக்குநீள் விடயமதுரமக்கிராகாரம், பேரானவோமமிரண்டுசீரகமுமரண்டுபெ ருங்காயம் வாய்விளங்கமஞ்சளோடேலம், வேறாய்நீவிலவுங்கப்பட் டைபத்திரிவிளாவரிசிவெட்பாலைசெவியத்தோல்விராவே. ௭௫௨

விரவுரீனக்காரங்குக்குல்சவுக்காரம் - வெந்தயஞ்சிற்றரத்தைத
யொடுதாளிசபத்திரியும், கருங்காயின்பட்டையொடுவெண்காரமப்
பா-கணக்காகவகையொன்றாகழஞ்சுமூன்று, புறவில்லாச்சாதிக்கா
ய்பத்திரிகிராம்பு-போட்டாவபின்கூட அவ்விரண்டுகழஞ்சு, திறமா
கவிவையெல்லாம் வடித்துத்தூளாய்ச் - செலுத்தடாகுக்குடத்தில்
வைத்துத்தையே. ௭௬௪

தைத்துஒருதாழிக்குள் தண்ணீர்விட்டமிழ்த்தித் - தயவாகக்க
விழ்சட்டி தன்னுல்மூடி, வைத்திதற்குநாலஞ்சுசீலைமண்ணுஞ்செய்
து-வளமாகவடுப்பேற்றித்தீமூட்டியெரிக்கில், எய்த்துநீர்குறுக்கிவ
ற்றியடிப்பற்றும - லெடுத்துதறிமருந்துதனை யேகமாய்ப்புரட்டிப்,
பொய்திடாதத்திதனை யிறக்கியபினப்பா - புத்தோடுவைத்திட்டுப்
போட்டு வறுபொடியே. ௭௬௫

பொடிவறுத்தால்கருகாமல்புடமாகத்தானே-பொடித்துவடிக
ட்டினதுகுக்கிடசூரணமாம், விடிவேறுஅந்திசந்திவெறுகடிதான்-
பொடியைவிரும்பிநீமண்டலங்கொள்வியாதியெல்லாம், படியாகப்ப
றக்குமேயஷ்டகுன்மம்வாய்வு - பதினெட்டுக்கிராணிவகையதிசார
மோடு, முடியாதவயிற்றெரிச்சல்மீரத்த - மூலமொடுவுப்பிசங்கள்
விஷபாண்டுபோமே. ௭௬௬

பறங்கிப்பட்டைச்சூரணம்.

போமப்பாகாப்பனுடுகிரந்திகுலை - புண்பொடிகள்சிரங்குவெ
ட்டைகுட்டம்போக, நாமப்பாபட்டையிலேசூரணஞ்சொல்வோம்-
நல்லவுருவாடின தாய்ப்புதுசாய்வாங்கி, யாமப்பாபறங்கியென்றபட்
டையஞ்சுபலந்தா-னப்பனே தூக்கியபின்முக்குருசங்கு, வேமப்பா
சிறுபிரப்பங்கிழங்கு கொன்றைப்பட்டை-வெற்றிபுரிச்சாரணைவேர்
கொடிவேலிவேரே. ௭௬௭

வேராகவகைக்குவொருபலமதாக - வெட்டியேகாயவைத்துத்
தூளாகவாட்டி, சீராகத்தாழியொன்றுபால்படிநால்விட்டுத் திறமா
கவேடுகட்டிப்பொடிவகைகள்கலந்து, பேராகப்பொடியைவைத்துக்
கவிழ்சட்டிமூடிப்பிட் டவித்தாற்போலவித்தப்பின்புவதைவாங்கி,
நேராகமேல்மருந்துகொத்துமல்லிமதுரம் நெறியானவோமமிரண்ட
திவிடையம்நீட்டே. ௭௬௭

நீட்டாவால்மிளகுவெந்தயஞ்சிற்றரத்தைநேர்த்தியாமக்கிரா
காரதிப்பிலியுங், கூட்டாசாதிக்காய்பத்திரிகிராம்பு கூறுனசீரகங்
கள்ரண்டு திரிகடுகும், பூட்டாவகையொன்றாகழஞ்சியதுமூன்று
புரளவேகாயவைத்துத்தூளாகவாட்டி, மூட்டாமுன்பொடியுங்
கூடச்சேர்த்து முறையோடேயதிற்பாதிசீனிகலந்திடுமே. ௭௬௮

கலந்தபட்டைச்சூரணந்தான்வெருகடிப்பிரமாணங் காலையந்தி
மண்டலமேகருதிக்கொள்ளு, மலர்ந்தவிரணங்கரப்பானுடுகுலை ம

காவாரம்வெட்டைபொடுஅக்கினியின்மந்தம், புலத்தவதிசாரமென்றுகிராணியுப்பிசங்கள் பொல்லாதவையிற்றிரைச்சல்புண்பொடியுந்தீரும், மலர்ந்தமுகம்போலிருக்கும்வச்சிரதேக மாக்கிவைக்கும்பட்டைபிடவாண்மைதானே. எசகூ

பதங்கம்.

ஆண்மைசொல்வோம்பறங்கிப்பட்டை யிடபதங்க மப்பனே லேசுருவாடினதைப்பாத்து, ஆண்மைபெறும்ஆறும்பலம்பட்டைதன்னை யழகாகப்பாக்குபோல்வெட்டிநீயும், ஆண்மையுடன்சங்கங்குப்பிச்சாற்றி லதைப்புரட்டிமூன்றுதரங்காயவைத்து, ஆண்மையொடுகாகத்தி லிட்டுவைத்து அடுக்காகப்பதங்கவகை யறையக்கேளே. எளய

கேளப்பாசங்கம்வேரமுக்கிருவேருங் கொடியானசிறுபிரப்பங்கிழங்குமைந்தா, கேளப்பாகொடிவேலிமூலமோடுகிளர்க்கொன்றைப்பட்டையெருக்கிலைவேர்கூட்டு, கேளப்பாசாரணைவேர்கருஞ்சூரைவேரும் கேடில்லாநாய்கோட்டான்பட்டைசிவன்வேம்பு, கேளப்பாவெள்ளருகுவகைபலந்தானஞ்சு கிருபையுடனிறுக்கியோர் பாண்டத்திலூட்டே. எளக

பாண்டத்திலூட்டியபின்சொல்லக்கேளு பண்புபுளியம்பொருக்கோர்பாண்டத்திலிட்டு, தாண்டவேதமர்களிட்டுப் பாஙலிமேலே சங்கைபெறமருந்தடைத்தபாண்டத்தையேற்றி, பூண்டிடவேசந்துக்குச்சீலைமண்செய்து புகழாகரவிமுகத்திலுலர்த்திக்கொண்டு, தோண்டவேமறுபடியுஞ் சீலைமண்செய்து துலங்கவேரவியில்வைத்துச் சீலைசெய்யே. எளஉ

செய்தந்தகலசமேற்பட்டையிட்டகலசந் திறமாகக்கவிழ்த்தியேசீலைமண்செய்து, வெய்தந்தவடுப்பின்கீழ்விராவிலேதுறுத்திவைர்க்கவேதமரிட்டுத்தீயைப்போட்டு, வைதந்தவூறெல்லாமந்திசந்திசாமம் வகையாகவொன்பதுநாள்மடியாமலூதநைந்தபொருக்குமருந்தெல்லாம்வெந்து நலமாகமேலேறிச்சாரும்பாரே. எளந

சாருமேபட்டையிலேயெல்லாம்வெந்து சஞ்சீவியாகவேபதங்கமேறும், பாருமேபதங்கமப்பாதூளாகவாட்டி பருவமாய்வழித்தெடுத்துக்கொண்டுபாங்கானபின்பு, சேருமேபட்டைத்தூள்சீனிசமனுகச் சேர்த்தியபின்வெங்காரஞ்சுத்திசெய்து, நேருமேயனவிட்டுபொடியிலொருகூறு நீட்டடாவொன்றுகக்கலந்துமினிகொள்ளே. எளச

கொள்ளேயிலேயந்திசந்திமண்டலந்தானப்பா கூட்டோடேகரப்பனொடுகிரந்திமுதல்போகும், கொள்ளேயிலேவெட்டைமுதல்குட்டம்போகும் சூலதிகமிருமலோடிளைபோகும், கொள்ளேயிலேமேக

நாலுபணத்தூக்கமடாபறங்கியிடபதங்கம் நலமாகக்கலந்தொன்றாய்ச்சரித்துச்சேர்த்து, மேலுமந்திசந்தியுண்ணுமண்டலந்தானப்பா வியாதிவகைகண்டவுடன்வெகுண்டேயோடும், மாலுமயன்றேடரியஆத்தாள்தான்விந்து மகத்துவத்தையொருவரால்காண்பதுவுமரிது, நாலுகளிலிந்தமுறைவைப்பார்களில்லை நொறுக்குமடாநோய்க்குமார்பாணிதானே. ௭௮௨

ஆணியென்றகறப்பனொடுகுட்டங்கள்போகும் அஷ்டகுன்மம்வெட்டையோர்பயித்திரண்டுதீரும், ஊணிநின்றகிரந்திமுதல்காய்ச்சல்சூலையொடுங்காததாபமொடுசோபந்தீரும், பேணிநின்றதாதுநட்டம்பொருமலுஞ்சீரத்தம் பாடுவுள்ளுருக்கியீளைகளுமிருமல், நாணியேபயந்தோடும் பத்தியத்தைக்கேளு நல்லாவின்பால்கூடநலமாம்பாரே. ௭௮௩

பால்கூட்டுமந்திசந்திமண்டலந்தானப்பா பரிமாற்றம்வெந்நீர்தான்மற்றொன்றுமாகா, சாலவேமண்டலத்துக்கப்பாலுமுப்பே சாந்தமாய்ச்சுத்திசெய்துகூட்டுகூட்டு, சீலமுடன்தூதுவளையிலைக்காய்பூவாகும் திறமானமுருங்கைப்பூபிஞ்சுமாகும், ஞாலமெல்லாம்புகழ்பொன்னாங்காணிமுளைதண்டு நறுநெய்யாந்துவரையொடுசிறுபயறுமாமே. ௭௮௪

சிறுபயறுசிறுகீரையவரைப்பிஞ்சாகுந் தெட்டுமீன்மூயல்காடைகவுதாரியுள்ளான், பேருடையவூர்க்கருவி விரால்மீன்கண்டம்வெள்ளாட்டுக்கண்டமும்மாம்வேறொன்றுமாகா, அறுதிரண்டுமண்டலத்துக்கப்பால்பின்பு அழகானதலைமுழுகு மெண்ணெய்சொல்வோ, முறுதியுடன்முககூட்டுஎண்ணெதலைமுழுகு வுசிதமடாசிகைக்காயரைப்புவெந்நீர்வாரே. ௭௮௫

வார்த்தெண்ணெய்முழுக்கன்றுகோழிச்சாறப் பாவளமாகக்கறிவைத்துகூட்டுகூட்டு, வார்த்தெண்ணெய்நாலுநாட் கொருககால்வேணும் மைந்தனேமுழுகுமுறைகோழிச்சாறும், வார்த்தெண்ணெய்முழுக்கன்றுபால்தயிர்மோர்புளியும் மாற்றடாமற்றுநாள்வாமிபுறம்வேண்டாம், வார்த்தெண்ணெய்மற்றிரண்டுகடந்தாலேறு மயக்கமிலையுடல்காந்திபொன்னுமாற்றே. ௭௮௬

ஏரண்டவெண்ணெய்.

மாற்றமிலாவேரண்ட வெண்ணெயொன்று மைந்தனேகிரந்தியொடு கறப்பன்போகச், சாற்றுவேன்விந்தூற்றுந்தயிலமோர்படிதான் சங்கங்குப்பிச்சாறுடனேகழற்சியிலைச்சாறு, நேத்தியாஞ்செம்பூவினெருஞ்சிச்சாறு நேர்சிறுகாஞ்சொறிச்சாறு முருககிலையின்சாறு, வேற்றுமையொன்றில்லாதமுருககிலைச்சாறல்லால் வேரரிப்பாலத்திநீருள்ளிச்சாறே. ௭௮௭

நவ்விரண்டுகழஞ்சாக விடித்துத்தூளாய் நயம்பெறவேயெண்ணையொடுபோட்டுக்காய்ச்சு, செவ்விதமாய்ச்சிவந்துவரும்பதந்திறக்கித்திறத்துடனேகற்கத்தினெண்ணைகடுகொண்றாய், வவ்வியமில்லாமலேவழித்துவைத்து வாறியபின் மூன்றுநாள் பிள்ளைகளுக்கப்பா, தவ்வியேகரண்டியொன்று தினந்தானேற்று சாந்தம்பின்னுகி யினிகுளுமைகொளுந்தானே. ௭௧௪

தானென்றகுளுமையென்னசித்திரப்பாடை தனிமதுரஞ்சீகமுந்தன்னிலாட்டி, மானென்றபிள்ளைகளுக்கவ்வண்ணமருந்து மாந்தமொடுகிராணிகளை பிரளியெட்டுமொழியும், தேனென்றுபத்தியந்தானுப்புமுதலாக சிற்றுப்புகுளுமைமுதல் செலுத்தவுடல்தெளியும், வேனென்ற வெண்ணைக்கு குணங்கள்நன்று விரும்பியதைதனைத்துண்ண விகற்பமில்லைபாரே. ௭௧௫

கண்டாத்திரிலேகியம்.

பாரப்பாகண்டாத்திரிலேகியத்தைப்பாடுகிறேன்புலத்தியனேபண்பாய்க்கேளு, நாமப்பாவில்லாமல் விளைந்தவிஞ்சி நலமாகத்தோல்போக்கிவில்லைபோல்நறுக்கி, நேரப்பாபதினைந்துபலந்தானீயும் நிறுத்தங்கேநறுகெய்யில் சிவக்கவேவறுத்து, சீரப்பா பொடிசெய்துசீலைவடிகொண்டு சித்திரமேல்மருந்தப்பா செப்புவேனே. ௭௧௬

அப்பாகேள் திரிகடுகு சிற்றரத்தைசெவ்வி யதிமதூரம் சிறுதேக்குவாய்விளங்கமேலெ, மொப்பான திரிபலையுங்கொத்துமல்லி யோமங்கிவளர்சீரகந் தாளிசபத்திரி, தப்பாதஇலவங்கப் பட்டைபத்திரி தனிநெல்லுப்பொரியுமிவை வகைக்குமுக்கழஞ்சி, இப்பாரிற்சாதிக்காய்பத்திரிகிராம்பு வியல்பான வதிவிடையம் வகைக்கிரண்டு கழஞ்சே. ௭௧௭

கழஞ்சாகமருந்தெல்லாம்நறுக்கியேநொறுக்கிக்காயவைத்துத்தூளாக்கிப்பொடியைவடிகட்டி, தழஞ்சியாய்ச்சீனியொருபலந்தான்கூட்டித் தனியிஞ்சிப்பொடிகலந்து சாற்றக்கேளு, வழஞ்சியாய் நல்லவெல்ல மஞ்சபலம்பாகாய் வரும்பருவம்பொடிதூவி வாகாக்கிண்டி, உழஞ்சியமாய்நறுநெய்தேன் வகைக்காழாக்கு வூரவைத்துக்கிண்டிடவே லேகியமாமுண்ணே. ௭௧௮

உண்ணப்பாவந்திசந்திகொட்டைப்பாக்களவு வொருமண்டலமருந்தவோடும்நோய்கேள், மண்ணப்பாபுகைச்சலோடிருமல்பித்தம் வர்த்தனையுநெஞ்செரிப்புவாந்திதீரு, மூண்ணப்பாமூவகையாநதொந்திப்பொங்கார முழங்குகுன்மயிறிரைக்கிறது மூலமெலும்வகையும், கண்ணப்பாகுரல்கட்டு தலைநோவுகுன்மம் கடுவறட்சிமலசலக்கட்டுடனேபோய்விடுமே. ௭௧௯

போய்விடவேயுட்சுரமுந் தாபசுரம்போகும் பொருமலொடுவ யிற்றுளைச்சல்தீராத்தந்திரும், போய்விடுமேவாய்வுட னக்கினியின் மந்தம் பொல்லாத்தாதுராவெட்டு மபாணவாய்வும், போய்விடுமேகிரா ணியதுமமேதிசாரக்குரிச்சல் போய்விடுமின்னமொரு புதுமைகேளு, போய்விடுமேபத்தியங்களுப்புமினாகப் பரபுகழ்ந்துவரைநெய்பாலாம் பூட்டக்கேளே. ௮௱

பூட்டாமலுமுதலையின் பிஞ்சிலேறுடு பூகாய்பத்திரியாகுந் தூதுளையப்பா, நாட்டக்கேள்புளிகைப்புமோர்புளியுந்தள்ளு நச்சுவிடு வாய்வானபதார்த்தந்தள்ளு, ஆட்டிறைச்சிமீன்வகைக ளுலந்ததா ய்க்கொள்ளுமப்பளைமற்றென்று மாகாதுசொன்னேன், தீட்டுமு ன்னேபாய்ந்து விடும்நோய்களோடு திராதவினை திரு மிதுபாரம் பரையே. ௮௱௧

கெந்ததாளிநெய்.

பாரம்பரையாய்வருநின்றகெந்ததாளிபறந்தோடநெய்யைநான் பகரக்கேளு, ஆரம்போலேபறுத்துவிடும் புண்ணையாற்று மாச்சரிய நெய்யினிடவாண்மையப்பா, வுகம்பெறவேவந்துநெய்யும்பலங்காலல் லா லுத்தமனேநாந்தாளி மணத்தக்காளி, திறம்பெறவே யிருள்ளி புளியாரைகூடச் சிறுகீரைச்சாறுவகை காலாழாக்கே. ௮௱௨

காலாழாக்கெனுஞ்சாறு நெய்யுஞ்சேர்த்துக் கடைமருந்துமே மைதிமதுரங்கூட்டு, சீலமுடன்சாதிக்காய் கிராம்புதேனுஞ் சீரகமு மாசிக்காய்கடுகிரோம், ஞாலமெல்லாம்புகழ்சீனிக்கற்கண்டோடு கல ஞ்சிறந்தமுந்திரிகைப் பழமுங்கால்கழஞ்சி, தூலமாய்த்தூளாக்கி நெய்யிலிட்டுக்காய்ச்சிச் சோர்வன்றிப்பதத்திலேவடித்திடாயே. ()

வடித்திறந்தூற்றிநெய்யையருந்திசந்தி வாகாகாக்காசிடைதா னுண்டாயானால், வடித்திருந்தபுண்மூலா தாரந்தொட்டு வெந்துநீ ராய்வாய்தனில் நாற்றம்போகும், கடித்திருந்தநீர்க்காரை மூலாதா ரம் கண்டவாய்த்தொண்டைநோய்க்குள் புண்ணாறு, மடித்துவிடுமூ ட்டுகொந்தலெரிதாக மனைத்துமபோம் கைப்புபுளிப்பதனை யகற் றிடுமே. ௮௱௪

சூசிகாசூரணம்.

அகற்றிடும்சூசிகா சூரணத்தைக்கேளு அப்பனேமொசுமொசு க்கைபொன்னாங்காணி, செகத்திலுள்ளபொடுதலையுஞ்சமூலம் நிழ லுலர்த்தி திறமாகவேவறுத்துத் தூளாகவிடித்து, தகர்த்தபொடிவ கைகட்டிச்சமன் வகைக்கிப்படிகால் தணிப்பருத்தி விதைப்பருப்பு மவ்வண்ணங்கூட்டி, விகற்பமில்லாச் சிறுவயற்றின் பொடியதுவுமு பூக்குவீறடக்குஞ்சீரகம் வெள்ளாட்டுநீர்நினையே. ௮௱௫

பின்றிவாதமிக்கிரமமிப்படியேசெய்தா லிருவினையுமற்றுவிடுங் குக்குலாதிகொள்ளே. அகஉ

## குக்குலாதிவடகம்.

குக்குலாதிவடகமப்பாகூறக்கேளு கூறியகுக்குலோகழஞ்சி மூன்று, முக்கியமாய்கல்லொருபலங்கிப்பட்டை முக்கழஞ்சிரசகந்தகுகூரையிரும், தக்கில்லாலொருகழஞ்சிலவங்கப்பட்டை தானு மொருகழஞ்சகுக்கிலியங்கழஞ்சி, மிக்கில்லாம்பலேவெல்லமோர்கழஞ்சிக் கப்பாற்பிலத்தூளிகொளிபாஷாணமுஞ்சே. அகங

மூன்றுவகைக்கொவ்வொன்றுக்கோர்கழஞ்சிகூட்டி முறையோடேதிபாகவிலையதனையப்பா, வென்றதொருபிடியாகச்சமூலமோடுகியாழ மிதில்வருந்துமூன்றுமொருகழஞ்சுதாளாந்திரமா, மூன்றவதைவேகவைத்தால்சத்தியாச்ச வொன்பதுவகைமருந்து முறைசேர்போட்டு, போன்றபின்புசொச்சியுடகொழுந்துடன்முக்கழஞ்சிபோட்டத்திலேகுளிர்ந்தசலம்விட்டிரன்றுயிடியே. அகச

இடித்தமருந்தெல்லாமொன்றுகச்சேர்த்து யிரதம்விட்டொருமட்டுமிடித்தபின்பு, மடித்திடாக்கறியுப்புபழம்புளியுமெளிதாய் வகைக்கொருகழஞ்சியிட்டுவாட்டுவாட்டே, துடித்திடாதுதிரத்தபதமிறுகத்தானே சூட்டடாகுளிர்ந்தசலம்தெளித்திடிக்கச்சேரும், படித்தாம்விடாமலேதொண்ணூறுகடிகை பதியவேயிடிப்பதிறம்பாங்காகும்பாரே. அகரு

பாங்கானபதங்கமப்பாமயில்கழுத்துப்போலாம் பக்குவத்தில் சன்னைக்காய்பிரமாணத்திலுண்டை, தேங்காமல்குளிகைகட்டிநிழலுலர்த்தி சிறந்ததொருபுதுக்கலத்திட்டாறிறைப்போல், நீங்காமல்தலைமுழுகிபேதிவாங்கு நேயமுடனத்திசந்திமூன்றுநாளப்பா, வாங்காமலேமுறைநாள்பொசிரெண்டுண்டை வாகாகப்பனைவெல்லம்பொதிந்துமருந்தருந்தே. அகசா

மருந்தருந்தியேமுறைநாட்கப்பாலோர்நாள் மருந்துவிட்டுவொன்பதுநாள்தலையைமுழுகு, பொருந்தலால்நல்லெண்ணெயொன்றைவிட்டோர்நாள் புகழ்பெறவேபதினைஞ்சமுழுக்குக்கப்பா, விருந்தாகநோய்களெல்லாம்பறந்தோடிப்போம் விபரமறையாப்புடவேபவுத்திரமுந்திரு, யிருந்தெழுந்துபறந்தெழுந்தசறப்பனுமெக்கித்தியேறுகின்றகுலைவகைபதினெட்டும்போமே. அகஎ

சூலைபதினெட்டும்போம்பிளவைகளும்போகும் குசிகாலாய்வுமுதல்பலவாய்வும்போகும், வாலையாய்ப்புடைத்தெழுந்தவீக்கமோபுண்கள் வயிர்கறடுமுறடுகளும்வளர்சூலைகட்டும், காலைமுடமாக்கியதுமேகவகையோடும் கைச்சூலைவாய்ச்சூலைகாசவகைகுட்டம், பா

ஊயிலேபடுதீப்போல்நோய்களையும்பறிக்கும் பத்தியமும்சகலமுமா ம்பன்றிமரையகற்றே. ௮௧௮

அகற்றுவதுசெம்மைமரையு மாடுபன்றியிறைச்சி யப்பமேனபச் சைமீன்பூசினிக்காயுந்தள்ளு, அகற்றிவிடும்பத்தியங்களாறுதிங்கள் கடந்தாலாமடாவெல்லாந்தான்சுடுமொன்றில்லை, அகற்றிவிடும்பத் தியங்களேகமாய்த்தா னப்போதுவீக்கங்கள்பூண்டபோது, அகற்றி விடுமிதிபாகல்வியாழம்போட்டருந்த அசடெல்லாந்தீர்க்குவிமெழு குதருந்திறமே. ௮௧௯

அரையாப்புக்கு.

திறமானவரையாப்புதீரவப்பா செப்புவேன்வேர்க்கொம்புதிப் பிலியோர்பலமாம், திறமாகமிளகோமம்வகைக்குமுக்கழஞ்சி நிறுத் தொருபெருங்காயமிருகழஞ்சியப்பா, திறமாகவெள்ளுள்ளிபருப்ப ஞ்சுகழஞ்சு சீர்சிறந்தபனைவெல்லமிரண்டரையாமஞ்சள், அறமான சீரகமறுகழஞ்சியப்பா வதிலிடவேகரிப்பான்சாறுவும்பாரே. ()

பாரப்பாகரியசீரகந்தான்பேறு படவேமுக்கழஞ்சியிவையொ ன்றாகக்கலந்து, ஏரப்பாபித்தகாமாலையரையாப்புக் கோண்டந்தி லைமதுமண்டலங்கால்கொள்ளு, சீரப்பாசூரணத்தின்எமனுபான ம் சேர்ந்திடவேநோய்களின்னம்செப்புவேன்கேள், காரப்பாவெலு மிச்சம்பழச்சாறறிற்பிரட்டி காயவைத்துமுன்றுதினம்பிட்டிடியேசெ ய்யே. ௮௨௧

செய்வதுதானரைப்பலத்தானப்பாயெல்லாந் திறமாகவுலர்த் தியேதூளாக்கிவடித்து, உய்வதற்குமெட்டொன்றுசீனிகலந்திட்டு ஒடுங்காதபித்தகாமாலைக்குவூட்டு, வெய்வதுதான்பிரமாணம்வெரு கடிதான்கொள்ளு விருபோதுமண்டலமுமனுபானங்கேள், கைவறி ல்லைபழச்சாறுதேனிலேயருந்து நலமானவிஞ்சிநேன்தன்னோடுமரு ந்தே. ௮௨௨

அருந்திடில்தீருகிறநோய்தானப்பா ஐயமொடுவாந்தியமோமக்க கேக்ரா, வருந்தியறிந்திடவல்லநன்மாணுக்கா வருக்கிறேன்பித்தகா மாலைவகையாறும், பொருந்தவேசொல்லுகிறேறும்வெள்ளைமஞ்சளிர த்தம் பொல்லாதநீலமொடுவெறட்சியிதுவல்லாஸ், திருந்தாகவூதகா மாலையொடு தீர்ந்துபோம்பத்தியங்கள்சிறநாரையுப்பே. ௮௨௩

தாளிசபத்திரிவடகம்.

உப்பில்லாப்பத்தியங்கள் சுறுக்காகவொழியும் வொழியாதவி யாதிகட்குவுரைக்கிறேன்பார், ஒப்பில்லாதகாளிசபத்திரியாம் வட கமுத்தமனைவகைகேளுதாளிசபத்திரி, எப்பில்லாக்கழஞ்சியொரு

மூப்பத்தியொன்று மிதற்கிசைந்ததிரிகடுகுதிரிபலையுமேலம், செப்பிறல்சாதிக்காய்பத்திரியுங்கிராம்பு செவியமொடுயிலவங்கப்பட்டையிலைகூட்டே. ௮௨௪

கூட்டடாமதூரமொடுவாய்விளங்கமோமம் குருசாணிசிறுநாகஞ்சிரகமிரண்டாரத்தை, கூட்டடாவால்மிளகுமக்கிராகாரம் கொத்தமல்லிதெசாபுரங்கூகைநீறும், கூட்டடாசிறுதேக்குவமுக்கிருவேரும் கூறரியபேரீத்துமுந்திரியாம்பழமும், கூட்டடாவகையொன்றாகமூஞ்சுயொன்று குமூறவேகாயவைத்திடித்துத்தூளாக்கே. ௮௨௫

தூளாக்குதாழிதனிலாவின்பாலப்பா தோன்றவேரெண்டுபடிவேடுகட்டி, தூளாக்கினைத்தபொடிபுட்டவியில்வைத்து சூட்டுடனேடுதன்வார்த்து வாட்டியுண்டைசுட்டு, தூளாக்கிப்பிரமாணங்கொட்டைப்பாக்களவுசூட்சமாயுருட்டியதுபுறுகாத்திட்டு, தூளாக்கிப்படியந்திசந்தியிலோருண்டை சுகமாகதொறுக்கியேமென்றுதின்னப்போமே. ௮௨௬

தின்னப்போங்காசமொடு சுயங்களோடிருமல் தீராதபீனையென்னுஞ்சுவாசகாசந், தின்னப்போமந்தாரகாசம்வறுங்காசஞ் சிலேற்பனத்திலவருந்தொண்ணூற்றாறுரோகங்கள், தின்னப்போங்குன்மங்கள்மீர்க்கட்டுவாந்தி தேகத்திலழல்காந்தல்நெஞ்செரிப்புத்தாகம், தின்னப்போஞ்சுரவீறுமக்கினியின்மந்தந்தெளியாதாமூன்றுவகையினோப்புந்தீர்ந்திடுமே. ௮௨௭

தீர்ந்திடுமேபிரத்தபித்தம்வாயினூல்கக்கல் செய்கிருணிமூலரத்தமலக்கழிச்சல்போகும், தீர்ந்திடுமேபத்தியங்கள்புளிபுகையுங்கைப்புந் தீண்டாதமாங்கிசங்கள்பச்சையொன்றுமாகா, தீர்ந்திடுமேதாதுநட்டம்மேகவகைகூடச் சித்தியாம்வெள்ளாட்டுப்பால்தான்கூட்டத், தீர்ந்திடுமேதாளிசபத்திரியாஞ்சூரணம் செப்புவேன்புலத்தியனேசெப்புவேனே. ௮௨௮

தாளிசபத்திரிசூரணம்.

செப்புவேன்தாளிசபத்திரிவகைதானப்பாதிறமாகநாற்பதுவேகமுஞ்சிகூட்டு, செப்புவேன்சீனியந்துயிடைக்கிடைதான்கூட்டு திரிகடுகுதிரிபலையும்சிறந்தவிரண்டேலம், செப்புவேன்சாதிக்காய்பத்திரியுங்கிராம்பு சிறுதேக்குமதிமதூரஞ்சிறுநாகப்பூவும், செப்புவேனிலவங்கப்பட்டையும்பத்திரியும் செவியமொடுவாய்விளங்கம்சித்தரத்தைதுகூட்டே. ௮௨௯

கூட்டடாவால்மிளகுவோமம்ரெண்டு கோஷ்டமுடன்கோரோசனைதெசாபுரமக்கிருகாரம், கூட்டடாகொத்தமல்லிமுந்திரிகைபேரீத்து செப்பரியகூகையுடநீறுங்கூட்டு, கூட்டடாகிலப்பனைவோமு

ஆட்டியதைச்சுண்டைக்காய் பிரமாணமுண்டை யப்பனேகட்டியபின்னிழலுலர்த்தி, வீட்டிமையில்லாமலே நோய்பிலமுங்கண்டு விடிவேறுமந்திக்கும் விரைந்துவொருவுண்டை, நாட்டுநீநறுந்தேனில்சீனியிஞ்சிச்சாற்றில் நலஞ்சிறந்த மாதளையின் பழச்சார்தன்னில், கூட்டுமேயெலுமிச்சம் நாரத்தம்பழச்சாற்றில் குழுறவிளவெந்நீரில் கொண்டிடநன்றாமே. அஙஎ

நன்றாகும்வியாதிகளை மென்றுதின்னும் நலங்கெடுக்கும்சூசிகாகிராணிகுன்மமோடும், குன்றாகும்வாய்வுகளு மதிர்ச்சியுப்பிசங்கள் கூட்டோடேயோடுமடா அருவைநீரும், நின்றாடும் பொருமலோடு தாகம்வெதுப்பருசி நிலையாதகிருணிமந்த முதலாய்த்தீரும், சென்றுடும்பலசுரமும் வெகுபேதிகழிச்சல் தீராதவினை தீர்க்கும் தேககசுகமாமே. அஙஅ

ஆமடாநெய்பாலுந்துவரைபோடண்ட மாட்டிசைச்சியுலர்த்தினதும் வழுதலைப்பிஞ்சாகு, மாமடாதூதுவளை சமூலமதுவாகுமவரைப்பிஞ்சல்லாது முளைத்தண்டுமாகு, மாமடாசிறுகீரை பொன்னுங்காணி அயிரைமீன்கெளிறுவிர லுலர்த்தினதுங்கூட்டு, ஆமடா வுப்புமிளகிருள்ளிந்து வரைவாகவெந்நீரு மருந்தலாமே. அஙக

சண்டமாருதக்கருக்கு.

ஆமடாநீர்ப்பாடு பேய்ப்பாடுமெல்லா லசிரணத்தில் மந்தமொடு பலபேதிமிருந்தால், ஆமடாசண்டமாருதக்கருக்கு அப்பனேதும்பையொடுகுப்பைமேனி, ஆமப்பாதைவேளைசமூலமாக வஞ்சுவகையொன்று பெரும்பிடியதாக, ஆமப்பாசட்டியிலே தீயிலேகருக்கியரைச்சாம்பலானபின்பு கொட்டிச்சட்டிதூடையே. அசய

தூடைத்தசட்டிதிரும்பவுந்தா னடுப்பிலேற்றித் துடியானவெந்தயமோமுக்கழுஞ்சி, உடைத்தகுளமடைப்பதுபோல் சிவக்கவறுத்தப்பா ஒருபடிதான்சலம்விட்டு எட்டொன்றாக்கி, மடைத்தலைப்பாச்சுவதாகவடித்துநீயருந்து வயிறடைக்கும்பேதியொடு வாந்தியுப்பிசமும், படைத்தவயன்போலடைக்குந் தாகம்போக்கும் பணைப்பில்லாபொரித்தகஞ்சி பரிந்துகூட்டே. அசக

மணல்குடிநீர்.

பரிந்துசெய்யுந்தாகமொடு அந்திரதாகம் பலதாகங்கொண்டாக்கால் பண்பாய்மைந்தா, தெரிந்துவருமணல்குடிநீர் செப்பக்கேளு சீனிமணல்கடுகுபோ லொன்றேகால் படிதான், நெரிந்துபோ காததொரு தாழிபெரிசதிலே நீட்டடாமணல்கொட்டி சாமம்வறுதிட்

போ, லரிந்ததிலேபோட்டாசங் கொழுந்துமப்பா, வழகாகப்பெரு
ம்பிடிதானறுத்ததிலேபோடு கரிந்துடனேநீப்பற்றும்பருவங்கண்டு
கண்கொண்டவெளிப்பருத்தி யோமமிருகமுஞ்சே. அ௬௨

ஓமமிட்டுப்பொரித்தபின்பு வொருகுடஞ்சலந்தா னொருமிப்
பாய்முகமாறி யுரத்திலேவிட்டு, தாமதமில்லாமலடுப்பேற்றிநன்றாய்
தணல்மூட்டியடுப்பேற்றி யெரிந்துவந்தநீரை, சேமமுடன் நிறுத்தி
த்தீயைத்தானும் நின்றுபோகாதபடி புகைத்துவண்டுகட்டி, யோம
மாய்த்தாக்கிலொருசொம்புநீரை யெரித்துவடிகட்டியே கொள்வத
ற்குக்கொடுமே. அ௬௩

கொடுத்திடவேமூர்ச்சைபோந் தாகம்போகும் கொண்டபின்பு
சிறுதாகமெடுத்தால்பின்னு, மடுத்திடவேதாகத்துக் கரைசெம்பு
கொடுக்கஅடக்கிவிடும் பரிமாற்றமானதாமதுவே, படுத்திடாதெழு
ம்பிவிடுந்தாகமொடுசோகம் பறக்குமந்தக்குடிநீரால் மரிவுமிகவுண்
டாம், தடுத்திடாப்படிசொன்னோம் சஞ்சீவிமருந்து சாற்றினவிவ்
வுற்பனங்கள் சார்ந்தவர்க்குமுறையே. அ௬௪

அஷ்டகுன்மலேகியம்.

உரைக்கிறேனட்டகுன்மலேகியத்தை யொடுங்காதவாய்வுவலி
வயிற்றுநோய்போக, வுரைக்கிறேன்தைவேளை பிரண்டைகுப்பை
மேனிக் கொவ்வொன்றுக்கொருபடியாஞ் சாரதனைக்கூட்டு, உரைக்
கிறேனிலுப்பையுடன் புண்ணாக்குத்தானு மோரஞ்சுமீரஞ்சு பலங்
குடத்திலூட்டு, உரைக்கிறேன்சாறுவற்றிக் குழம்பானபின்பு வுண்
மையுடன் புடக்கருக்குமிடித்துத்தூளாக்கே. அ௬௫

தூளாட்டிவைத்தபின் பதற்குமருந்தப்பா சொல்லக்கேள்திரி
கடுகு வோமமோர்பலமாய், தூளாட்டிரோகணியுமன்னபேதி சுறுக்
கானகுருசானிக்காயமுக்கமுஞ்சி, தூளாட்டிவறுத்திடித்து மருந்து
சேர்த்து சொற்பெரியபனைவெல்ல மஞ்சுபலங்கூட்டி, தூளாட்டு
முன்சாறுவற்றினதையுரலில்துளிசிதறுதேவழித்தெடுத்துவிடுபொ
டியைத்தூவே. அ௬௬

பொடிதூவிப்பனைவெல்ல முக்கூறட்டு பூண்டிடவே யிடித்தபி
ன்புபுரளவேயின்னம், பொடிதூவிவெல்லமிட்டு நன்றாகவிடித்துப்
பின்புமதின்மேல்பனை வெல்லமூந்தூளான, பொடிதூவி யிடித்திடு
வாய்சாமமொன்றுக்கப்பால் புனிதமாமயில்கழுத்தாம் நாகம்போல்
தூளாம், பொடிதூவிமருந்தைச்சூட்டுடனே தான்றிக்காய்போல்
குளிகைகட்டியொருபுதுக் கரகத்திடுமே. அ௬௭

புதுக்கரகத்திடுமருந்துமூன்றுநாளாறிப் பின்புமொருகுளிகை
தன்னையந்திசந்தியூட்டு, இதுக்கடங்காவாயுவில்லை யட்டகுன்மங்
கெண்டை யியல்பில்லாவுப்பிசங்கள் தெரியாமைதீரு, மதுக்குடம்
போல் பெருவயிறுதிரட்சிமலைக்கட்டு வாயுவுடனிரத்தம்வாங்கி விக்

குமல்லால், மதுரங்கிகின்றபலவாய்வுந் திசைகெட்டோடு முண்மை கைப்புளிப்புமோர் பதார்த்தங்களொழியே. ௮௪௮

நாரத்தங்காய்லேகியம்.

ஒழிவதற்குநாரத்தங்காய் லேகியத்தை யுரைக்கிறேன்நாரத்தம்பழச்சாறுமின்றி, ஒழிவதற்குவமுக்குறு சாரணைவேர்ச்சாறு மொவ்வொன்றுபடிநாலு புயர்ந்தநல்ல வெல்லம், ஒழிவதற்குப் பயித்தஞ்சு பலங்களைத்தசாறு மொருநான்குபடிகூட்டி யொன்றாய்க்காய்ச்சி, ஒழிவதற்றுப்பாகாகக்குறுக்கியப்பா லுண்மையுடன்கற்கவகை யுரைக்கின்றேனே. ௮௪௯

உரைக்கிறேன் திரிகடுகு ஏலமதிமதுர முயர்தேசாபுரங்கோட்டஞ்சிற்றரத்தைதமோ, டுரைக்கிறேன்கொத்தமல்லி தாளிசபத்திரியு மோகோகோமுந்திரிகைப்பழமுமோர்பலமா, முரைக்கிறேனதிவிடயமக்கிருகார முண்மைபெறும்வாய்விளரு சிறுநாகப்பூவு, முரைக்கிறேன்சாதிக்காய்பத்திரிஇரும்பு ஓங்குதிரிபலையொடுகுருசானிஓமம்.

ஓமந்தான்கெந்தபொடி கரியசீரகந்தா னெவ்வொன்றுக் கரைப்பலமா யொக்கவெயில்காய்ச்சி, நேமமாயிடித்துவடிகட்டிச்சூரணத்தை நேர்த்தியாய்ப்பாகிலே தூவியேகிளறி, சாமமரைபதமாகக் கிண்டியபின்சீனி தனையுமேபதினஞ்சு பலந்தான்தூவி, ஏமமாய்ப் பின்புதேனிரண்டுபடிவிட்டு இறக்கியபின்னறுநெய்யோர் படிவிட்டுக்கிண்டே. ௮௫௧

கிண்டியதோர்லேகியத்தைப்புதுகலசத்திட்டுக் கிருபையுடன் வண்கட்டி நாலுதினமாறி, மண்டலந்தானந்திசந்தி யருந்திலைப்பாவனர்பித்தம்நெஞ்செரிப்பு மரோசியொடுவாந்தி, உண்டுவருந்தாபசுரம்வாந்திமித்தருட்சையுட்குடுகிறகிறப்பு வாய்வுதலைநோவும், கண்டவுடன்பயந்தோமக்கினியுமந்தம் கழன்றுமனைநீர்க்கட்டு காந்தலும்போய்விடுமே. ௮௫௨

அயமுருதிவடகம்.

காந்தலும்போம்பத்தியந்தான் புளிகசப்புமொருங் கடிந்துவிடு மயமுருதி வடகத்தைச்சொல்வோம், தீர்த்தவரைப்பொடியஞ்சு பலமொடுகாந்தம் தெளிபுதிப்பிடிப்பதிலே மூன்றுபலஞ்சேர்ந்து, போந்து கரிப்பான்சாற்றி லரைத்திரண்டுபுடந்தான் போட்டபின்பெறு மிச்சம்பழச்சாற்றிலரைத்து, பாந்தமாயிரண்டுபுடம் போட்டப்பா நல்ல பொருநாவல்பட்டைச்சாறரைப்பிரண்டுபுடமாங், கோந்தொருகியபூவைகமருந்துதன்னைக்கூறுகிறேன்வகையாகக்கூறுவேனே.

கூறுகிறேன்கரிசாலைவெள்ளைநொச்சிகுப்பைமேனிகழற்சியொடொடுதலைவெற்றிலையு, மாறில்லாமுருக்கிலையீ சங்குகண்டங் காரி மணிப்பிரண்டை தொண்டையிலை மாவிலிங்குகூட்டு, பேறுபடக் கொடிவேலியுமுக்குருமுக்குறண்டி. பேய்த்தேத்தான்பட்டையொடு

நலைசுருளிக்கொடியும், வேறுபடாமலைதாங்கி வேரும்வகைக்கொன் றுவிளம்பிஞேம்பலமஞ்சு தறிபாண்டத்தூட்டே. அருச

பாண்டத்து மருந்துக்குச் சலமுமிருதூணி பாய்ச்சியேகாய்ச் சடா நாலொன்ருய்க்குறுக்கி, பாண்டத்தில்வடிகட்டி விடுகுறுணிய ப்பா பாங்கானவெள்ளாட்டுக் கோமயமுங்குறுணி, பாண்டத்தில் விடுபசுவின்கோமயம்வண்ணம் பழையவிரும்புக்கிட்டம் நாறுபலம் நொறுக்கி, பாண்டத்திலிட்டபின்புபழச்சாறுநாலு படிவிட்டுஅடுப் பேற்றி குறுகினதுபாகே. அருரு

பாகாகவிரண்டுபடியானபின்பு பாய்ச்சப்பாகற்கவகை தன்னை க்கேளு, வாகான திரிகடுகு திரிபலைசிற்றரத்தை மரமஞ்சள்கரியசீர கஞ்சிவதையோடு, வேகாதசெதசாபுரம் வகைக்குமொருபலந்தான்வெ றுஓமமிரண்டுபலம் வெட்பாலைகிராம்பு, தேகாதிசீரகமுந் தாளிசப்ப த்திரியும் சிறுநாகங்கோட்டமில வங்கமிவைசேரே. அருசு

சேரப்பாவகைக்குமரைப் பலங்களிவையெல்லாம் தெரிக்கவே காயவைத் திடித்துசூரணத்தில், பாரப்பாமுன்வைத்த காந்தசெ ந்தூரம் பரவியொன்ருய்க்கியாழநீர் தன்னுலாட்ட, நேரப்பாவது ஞேடுவெள்ளுள்ளிப்பருப்பு நிறுத்திரண்டுபலங்கூட்டு கிச்சாதிலிங் கம், வாரப்பாயரைப்பலந்தான் கூடச்சேரு மைந்தனேபொரிக்கார மணியும்வகைகேளே. அருஎ

பொரிகாரமொருபலஞ் சாணைகத்தில் பிசைந்துதான் கழுவிய பின்சுத்திகேளு, வரிதானநவாச்சாரஞ்சீனக்கார மப்பனேவெடியுப் புகல்லுப்போர்பலமும், விரிவானபெருங்காய மரைப்பலமுங்கூட்டு விளைந்த நெற்றுத்தேங்காய்தான் மூன்றுடைத்துக்கீறி, பரிவாகவி வையெல்லாங் கியாழநீர்கொண்டு பண்பாகவவ்விரண்டு சாமமரைத் திடுமே. அருஅ

அரைத்ததொரு மருந்ததனை துட்டுக்காசளவு அப்பனேவில் லைனக்குளிகைகட்டி, நிரைத்திட்டு வடகமதைநிழலுலர்த்தி நிலை யாதவியாதிகட்கு மண்டலந்தானருந்து, தூரத்திவிடுந்தேனிஞ்சிச் சாறுமனுபானம்கூட்டநொச்சிச்சாறல்லால் வெள்ளுள்ளித்தயிலம், விரைத்ததொரு சாரணைவேர் வேப்பந்தோல்தயிலம் வெவ்வேறேயு ண்டுவர வியாதியொழிந்திடுமே. அருக

ஒழிந்துவிடும் வியாதிக்கு வகையைக்கேளு உள்ளானகோரவை யொடுபிறநீர்க்கோவை, ஒழிந்திடுமேபெருவயிறு நீராமைகவுசியோ டுமேகாமாலை விஷபாண்டுகுன்மம், ஒழிந்துவிடும்குஷ்டமொடுமகோ தரம்பிலிகை யொழியாதவெப்புடனே பாண்டெட்டுவகையும், ஒழி ந்துவிடும்புளிகைப்புமோர் புகையுமாற்று மூப்பாகுமாங்கிசங்கள் வாய்வானதொழியே. அகய

## குன்மத்துக்கு.

வாய்வானவலிகுன்மங்கிருமிகளும்போக மருந்துகளுஞ்செப்பு கிறேன்மச்சுகேந்திரா, வாய்வானதாறுமடத்திரிகடுகுமிந்துவளர்கா யமோமமொடுகடுகுரோணி, வாய்வானவவ்விரண்டுசீரகமுஞ்சமனாய் வகையொன்றாகமுஞ்சிமூன்றுகச்சேர்த்து, வாய்வானதறவிடித்துக் குளிர்ந்தசலத்தாட்டு மயனம்போலிருசாமமானபின்புவழியே. ()

வழித்தமொருமருந்தையொருகழற்சித்தாயுண்டை வாகாகக் கட்டியேநிழலுலர்த்தி, நெழிந்திடாவாதகுன்மமொழிவதற்கு நீட் டடாகுளிகையொன்று குடிநீரிலூட்ட, வழித்துவிடும்வாதமடக்கி நொச்சிவேரு மப்பனேயவ்விரண்டுபலமுங்கூட்டு, பழித்திடாச்சார ணைவேர்பலமுங்காலாம் பதியவேயிருநாழிநீரில்போமே. ௧௬௨

போட்டகெட்டதாக்கியதில்குளிகைசேர்த்து பூட்டவேவாத குன்மம்பிரண்டேயோடும், நாட்டமுடன்பித்தகுன்மம்போகவப்பா நலமிளகுசாரணைவேர்சீரகமுமூன்று, சூட்டவேயவ்விரண்டுகழஞ்சி தட்டி துலைக்கமுடனிருநாழிநீரிலிட்டு, ஆட்டவேயெட்டொன்றாய்க் குறுக்கிநீரிலதில் குளிகைசேர்த்துண்ணவடாதோடுந்தானே. ()

## இரத்தபித்தகுன்மத்துக்கு.

ஓடவேரத்தபித்தகுன்மத்துக்கு முறைக்கிறேனனுபானமுண் மையாக, நாடென்னும்பருந்தியிடபிஞ்சிடித்துப்பிழிந்து நன்னீரி லொருகுளிகைநயந்தேயூட்ட, சாடிடுமேயின்னமொருஅனுபானங் கேள் சஞ்சீவிமாதளம்பழத்தோடுகட்டி, போடுமொருபடிசலத்தை யெட்டொன்றாய்க்குறுக்கிப் பூட்டியிடவிட்டோடும்பின்புவகைகே ளே. ௧௬௪

## பித்தசிலேத்துமத்துக்கு.

கேளப்பாபித்தசிலேத்துமத்தில்வருங்குன்மம் கெதிகெட்டுஓ டவேகேளுகேளு, நாளப்பாவெட்டுக்கும்வெந்தநீரில் நயமாகவொ ருகுளிகைநயந்துரைத்துவுண்ண, தாளப்பாசுத்தசலமோர்படியெட் டொன்றாய்த் தாக்கியபின்குளிகையொன்றுரைத்துத்தேனும், வே ளப்பாகாசிடைதான்விட்டருந்தத்தீரும் வெப்புக்குயரைக்கழஞ்சு கடுக்காயிருகழஞ்சே. ௧௬௫

இருகழஞ்சுகடுக்காயும்வேப்பீர்க்குநன்று இஞ்சிச்சாற்றிலரைத் துவிளவெந்நீரால், விருதுடையவாதமடக்கியும்நொச்சிவேரும் வெ ற்றிடாரிசாரணைவேர்யாழத்திலூட்டல்,உருவாகவுலர்த்திவிடுங்கிரு மிகளுமாறு மோகியம்போல்பொன்னுகுமன்மதனுமாகும், கருவித ணையொருவருக்குங்காட்டாதேயப்பா கருத்திறந்துசொல்லிவிட்டே ன்கருத்துணர்ந்துபாரே. ௧௬௬

## பீனிசங்களுக்கு.

திறந்துசொன்னேம்புலத்தியனேமச்சகேந்திரா திராதுபீனிச
ங்கள்செம்பீத்தமோடு, பறந்தோடும்படித்தயிலம்பாகமாய்க்கேளு
பண்புடையவிலுப்பைவேரமுக்கிருவேரு, மறம்பெரியவில்வைவேர்மு
த்தக்காசு மப்பனேயெலுமிச்சம்பிலப்பனேயின்கிழங்கு, கறங்குவிய
வேங்கையிடசிராசியும்நாரி காட்டில்வளர்பசளியிட கிழங்குங்கூட்
டே. ௮௬௭

கூட்டடாநீர்வள்ளிக்கிழங்குகுறுந்தொட்டி கூறரியபூமிசர்க்க
ரைக்கிழங்குமல்லால், பூட்டடாசிறுதேக்குச் செண்பகமோடப்பா
புகழாகவஜகையொன்றுக்கோர்பலமாய்நொறுக்கி, நீட்டடாஐங்குறு
ணிசலத்திலிட்டு நெருப்பேற்றியெட்டொன்றாய்க் குறுக்கிப்பின்பு,
முட்டடாநொச்சிகஞ்சாநெல்லிநாகவல்லி முக்கியநல்லெண்ணையா
வின்பால்படியஞ்சுசேரே. ௮௬௮

சேரானபால்தயிலந்தன்னிலேதான் திரட்டுதற்குக்கற்கவகை
செப்பக்கேளு, பேர்மதூரமிலவங்கமேலமஞ்சள் பெருகுமிருசீரகமு
ம்நன்னாரிகோஷ்டம், சாரமுள்ளசாதிக்காய்பத்திரிகிராம்பு சந்தன
ஞ்செஞ்சந்தனமுமகிலுங்கூட, திருபெருமஞ்சிட்டி செவ்வள்ளிக்
கொடியும் செண்பகப்பூச்சிறுதேக்குதேவதாரந்தானே. ௮௬௯

தானென்றபொன்மெழுகுநெல்லிவெட்டிவேரும் சதகுப்பை
கல்மதங்கல்நார்பூலாக்கிழங்கும், வேனென்றவகைதனக்குக்கழஞ்சி
யஞ்சு வெய்யலிலேகாயவைத்திடித்துப்பின்பு, கோவென்றவையின்
பாலாட்டிவாங்கிகுழம்பாகப்பாலிலேகலக்கிவிட்டு, தேனென்றமொ
ழியாளைப்பூசித்தேதான் சிறப்பாகச்சாப்பிட்டுவொன்றாய்ச்சேரே.

சேரடாகியாழகற்கம்பாலெண்ணெயெல்லாம் தியானித்துத்தி
மூட்டியடுப்பிலேற்றி, பாரடாமூன்றுநாள்சிறுதொதியுமிட்டுப் பது
ருமல்நாலாநாள்பதத்திலேவடித்து, சீரடாவயின்மருந்துநாற்கழஞ்
சிதெளிந்த பச்சைக்கற்பூரமிருகழஞ்சுபூட்டு, வாரடாவெண்ணெய்
தனேச்சூட்டுடனேகலசம் வளம்பெறவேதயிலத்தைவிட்டாறிக்கட்
டே. ௮௭௧

கட்டடாகுளிர்ந்தபின்புதானியபுடமாகக் கண்டுநெல்லிற்பத்
துநாள்கிடந்தபின்பு, மூட்டடாதலைமுழுக்குநாலுநாட்கொருக்கால்
முழுகிவிடுசெவிநாசிதனில்தயிலம்பிறத்தி, விட்டடாசியக்காயரை
ப்புவெந்நீர்கொண்டு மேன்மையாம்புலத்தியனேமச்சேந்திரா, மெ
ட்டானபதமாகவாறவைத்து விளாவாமல்முழுகுமன்றாவிலக்குமது
கேளே. ௮௭௨

கேளப்பாமுழுக்கன்று மோர்புளிபால்தயிரும் கிறுகிறுத்தபு
கைக்கசப்பயறுபலகாரம், கேளப்பாவிறைச்சியொடுகெனிவகைகளா
கா கிரமமுள்ளபத்தியங்கள்சொல்லிவிட்டேன், கேளப்பாதீருகிற
நோய்தாளென்றைறக் கேடில்லைத்துயிலைத்தால்கிருபைமெத்த, கேள
ப்பாவதின்பெருமைபிணிசங்கள்வகையைக் கிளத்துவேன்மைந்தாநீ
கேளுகேளே. ௮௫௩

கேளடாநீர்ப்பொசிவிரத்தமொடுசிராயும் கிறுகிறுப்பாய்பருத்
திவிரைபோல்நெருறிக்குமெல்லாம், கேளடாவறட்சியொடுபிணிசங்க
ளெல்லாம் திசைகெட்டுவோடுமேபெண்கண்ணேயும், கேளடாசெம்
பித்தமேகவகைகறப்பான் குடிலமாய்வருவாய்வுகபாலவாய்வும்,பா
ளடாஒருதலைநோய்சிறைநோயுடனே பஞ்சிவிட்டதீப்பொறியாஞ்
செந்தூரமுண்ணே. ௮௫௪

## பத்தியம்.

செந்தூரங்குளிகைவகைபலவகைமாத்திரைக்குஞ் செப்புவே
ன்பத்தியத்தைத்திறமாய்க்கேளு, விந்தப்பாசுத்திசெய்தவுப்புமாகு
மிசைந்தநெருதுவரையிடபருப்புமாகும், பந்துசெறியாவின்பால்
நெய்யுமாகும் பகைறிதான்முருங்கைபிலைப்பிஞ்சுமாகும், கொந்தல
வுந்தூதுவளைசமூலமாகும் கொடிவழுதலைப்பிஞ்சுங்கூட்டலாமே.

ஆமப்பாசிறுகீரைமுளைத்தண்டாகு மப்பனேயண்டமொடுசு
ருமீனாகும், ஆமப்பாமுசலுமெம்புவெள்ளாட்டுக்கண்டமழகானவிரா
ல்மீனுமுலர்ந்ததாகும், ஆமப்பாவெள்ளாட்டுப்பாலுமாகு மாற்சரி
யமினகுடனேகருவேப்பாகும், ஆமப்பாவெள்ளுள்ளிசீரகமுமாகு
மப்பனேமற்றொன்றுமடுக்கொண்ணாதே. ௮௫௫

ஒண்ணாதுபரிமாற்றம்வெந்நீர்கண்டா லோகோகோபத்தியங்க
ளுரைத்துவிட்டோம், பண்ணுகும்பத்தியத்தின்படிநின்றார்க்குப்பா
ழான தீவினைகளில்லையில்லை, நண்ணுகமண்டலந்தான் மருந்தருந்து
நாடாதுபிணியணைத்துமகன்றேயோடு, மெண்ணாதேவிசாரங்கள் ப
ண்ணிடாதே என்மக்காள்முத்தியும்வந்தெய்துங்காணே. ௮௫௬

## கருணைசுரகியாழம்.

காணப்பாகருணைசுரகியாழங்கேளு கைகண்டபேராமுட்டிவே
ர்க்கொம்புஞ்சுமனுப், காணப்பாகட்டியிருநாழிநீரில் கியாழமதுயெ
ட்டொன்றாய்க்குறுக்கிப்பின்பு, காணப்பாவந்திசந்தி மூன்றுநாள்
கொள்ளகன்னமெலாந்திருமந்திருட்டைபோகும், காணப்பாமுழுக்
கன்றுமந்தசுரம்வந்தால் கியாழமிடுதாம்பிரசெந்தூரங்கேளே. ()

## தாம்பிரசெந்தூரம்.

கேளப்பாதாம்பிரத்தைச்செந்தூரமாக்க கெடியானமருந்துவகைபிரித்துச்சொல்வோம், நாளப்பாசூதமொடுமனோசிலையுங்கெந்திநலமானவரிதாரம்நாவிலிங்கம், வேளப்பாநேர்வாளமக்கிராகார மேலானநிறுவிஷமும்வெங்காரந்தானும், நீளப்பாகாரீயமுருக்கிச்செம்பு நேராகவகைக்கிரண்டுபலந்தான்றூக்கே. அஎகூ

தூக்கியேதாம்பிரத்தையுருக்கிதன்னைத் தூளாகஅரவியேமருந்தோடொக்கத், தாக்கியேகற்றாழஞ்சாறுகொண்டு சாதகமாயிருசாமம்தளரவாட்டி, தேக்கியேயடைகட்டிக்காயவைத்து செயமாகப்புதுசட்டிக்குள்ளேவைத்து, தோக்கியேமறுசட்டிக்கொண்டுமூடி அடியாகவிளிம்பெல்லாஞ்சீலைசெய்யே. அஅ௰

சீலைசெய்துமண்பூசிவாலுகையிலேற்றி தேவிக்குப்பூசித்துதிடமாய்நின்று, வாலையேயம்பரையேகருணைவாழ்வே மகத்தானபெரியோர்கள்மனமேயென்று, காலையிலேயெரித்திடுவாய் மூன்றுதானுங்கருவாகவெரித்துவரிமைந்தாநீயும், மாலையிலேகணபதிக்குப்பூசைசெயது மறுகாலைச்செந்தூரமகத்தாம்பாரே. அஅக

மகத்தானசெந்தூரந்தூளாயாட்டி மைந்தனேகுழலிலேவாங்கிவைத்து, அகத்தானவியாதிகட்குக்கொடுக்கமைந்தா வனுபானஞ்சொல்லுகிறேனப்பாகேளு, சுகந்தானதிரிகடுகுவைறுத்துஆட்டித் தூளிலேவெருகடிதான்தேனிலூட்ட, உகத்தாகச்செந்தூரம்பணந்தான்றாக்கி யுண்டிடவேதீருகிறநோயைக்கேளே. அஅஉ

நோயேது அஷ்டகுன்மம்செரியாமையோடு நாகர்ந்துவருஞ்சூலைசுரமகோதரம்வெறுப்பு, நோய்போகுங் காமாலைகிரந்தி குஷ்டம் நோக்கினதோர்வெடிசூலை வண்டுகடிதானும், ஜோய்போகும்பெரும்பாடுரத்தகாசம் நுணுக்கத்தில்நுணுக்கமாந்தாம்பிரமப்பா, நோய்போகுமுட்கருவையறிந்தாயானல் நொடிக்குள்ளேவியாதிகளையுண்ணும்பாரே. அஅங

## தங்கபற்பசெந்தூரங்.

பாரப்பாதங்கபற்பசெந்தூரத்தைப் பாடுகிறேன்தங்கமதுபலந்தானென்று, நேரப்பாயுருக்கியதைத்தகட்டாய்த்தட்டி நினைவாகச்சபபாதிரந்தான்பத்து, பாரப்பாதிரும்பவதைலேசாய்தட்டிமாட்டியேநொருக்கிநீவைத்துக்கொண்டு, காரப்பாமூசையிலேமருந்தைச்சொல்வோங் கம்பந்தூராயரைத்துக்குகைக்குப்பூசே. அஅச

பூசியந்தவிலேயரைத்துக்குகைக்குள்வைத்து பொற்பொடியை யதற்குள்ளேபோடுநன்றாய்த், தேசியேயிலைமருந்துவதற்குள்மூடிச் சீலைசெய்துமண்செய்துசிறக்கமைந்தா, பேசியேமுந்திமுந்திப்புடந் தானப்பா பெருங்கோழியுடம்போடலைக்கநீயும், ஆசியேயிப்படி தானைந்துபுடம்போடு மாகராதங்கபற்பமாகும்பாரே. ௮௮௫

ஆகியதோர்தங்கபற்பம்செந்தூரத்தை யப்பனேசாப்பிடவே யனுபானத்தை, தேகியதோர்வியாதிகண்டுசேர்த்தாயானால் தீருகிற வியாதியினிச்செப்பக்கேளு, பாகியதோர்சிலேற்பனந்தான்தொண் ணூற்றாறும் பறங்கிவகைபதினாறும்பத்திரண்டுமேகம், போகியதோ ர்குட்டமெனும்புருக்கிசோகைபோகுமேவுண்டதும்போகுந்தானே

சூதகற்பூரம்.

காணென்றசூதகற்பூரந்தன்னைச் சாதகமாய்ச்சொல்லுகிறேன் சார்ந்துகேளு, தேனென்றசூதமொருபலந்தானரண்டு திறமாகபச் சைமஞ்சள்சாற்றாலாட்டி, வானென்றசாமம்ரண்டுஆட்டிவாங்கி ம றுபடியுமுலர்ந்தமஞ்சள்கியாழங்கொண்டு, மானென்றவிருசாமமா ட்டிவாங்கி மைந்தனே மஞ்சளிலைக்குள்வையே. ௮௮௭

வைத்ததொருசூதகத்தையிலையால்மூடி வாகாகநூல்சுற்றிச்ச ட்டிக்குள்ளே, வைத்ததொருசாறுவிட்டுவேடுகட்டி மருவியதோர் பிட்டுப்போலவித்துவாங்கி, வைத்ததொருபுட்டெடுத்துமஞ்சள்சா ற்றால் மாட்டடாவொருசாமம்பழச்சார்கொண்டு, வைத்ததொரு சாமம்நீயாட்டிப்பின்பு மறுபடியுமழிஞ்சிவேர்சாற்றாலாட்டே. ()

ஆட்டியேயொருசாமமெடுத்துக்கொண்டு அப்பனேசீனமதிற் பலந்தானரண்டு, கூட்டியேமஞ்சள்சாரதனால்நீயுங் குமுறவேயரை த்ததனைக்குப்பிக்கேற்றி, கிட்டியேயெழுசீலைமண்ணும்பூசி நினைவா கக்குப்பிவாய்வளைப்புக்கல்லால், மூட்டியேபொதித்ததனை யடைம ண்கட்டி யுலைவேதாழிக்குள்மணலைக்கொட்டே. ௮௮௯

மணலையிடுநாலுவிரல்கணத்தால்நீயும் மைந்தனேகுப்பிவைத்து மறுபடியுநீதான், மணலையிடுதாழியிடகழுத்துமட்டும்மாட்டடாகா டாக்கினிமதித்துநன்றாய், மணலையிடுபனிரண்டுசாமம்நீயு மடியாம லெரித்தாறிவாங்கிவைத்து, மணலையிடுகுப்பிதனையுடைத்துப்பாரு மல்லிகைப்பூப்போலிருக்குங்கற்பூரந்தானே. ௮௯௦

கற்பூரமுண்பதற்குவனுபானங்கேள் கலரவேதிரிகடுகுவெதுப் பியாட்டி, கற்பூரம்பணவிடைதானென்றுதாக்கி கருத்துடனேவெ ருகடிதான்பொடியுங்கூடக், கற்பூரந்தேனிலேகுழைத்துக்கொள்ள கட்டாகவிருபதுநாளுண்டுகாண, கற்பூரமட்டகுன்மம் பத்தெட்டு வாதம் கடிதானமேகோதரங்கள்துலைந்துபோமே. ௮௯௧

சூலைபோம்பதினாறுகிரந்திகுட்டம் சொரிசிரங்குபதகரியுந்தாமரைகள்நாலும், சூலைபோம்வடிகறப்பன்சன்னிதோஷம் சூசிகாவாயுவொடுசிலேர்பனகாசம், சூலைபோம்புலத்தியனேமச்சகேந்திராசுகமிகுந்தமெய்ஞ்ஞானகுணவிநோதா, சூலைபோம்நேத்திரத்தில்தோன்றுரோகம் தொண்ணூற்றறுவகையுந்தூரப்போமே. அசுஉ

மண்டூகசெந்தூரம்.

போகுமப்பாவியாதியெல்லாமண்டூகத்தை பொசித்திடவேசெந்தூரப்போக்கைக்கேளு, பாகுமப்பாநந்தத்திற் புராதனக்கிட்டம்பார்த்தெடுத்துக்கொண்டுவுலையிலூதி, ஆகுமப்பாகோமயத்திற்றோய்த்துதோய்த்து அஞ்சாறுதாமெடுத்துஅசாலூதி, சாகுமப்பாகல்லுரலுக்குள்ளேபோட்டு சாதகமாய்கட்டபாரைதன்னாலாட்டே. ()

ஆட்டியதோர்தூளெடுத்துக்கல்வத்திட்டு அப்பனேகரிப்பான்சார்குமரிச்சாறு, ஆட்டியதோரிருசாமமரைத்துவாங்கி யுத்தமனேவில்லைசெய்துவோட்டில்வைத்து, மாட்டியதோர்மேலோடுகொண்டுமூடி மண்செய்துவுலரவைத்துமைந்தாநீயும், மூட்டியதோரெருவடுக்கிமுழுந்தான்மட்டும் மூதிரவேயோடுதனைய தன்மேல்வையே.

வைத்ததொருவோட்டின்மேல்கச்சுகட்டும் வாகாகவெருவடுக்கியடைவுக்கெல்லா, மெய்த்ததொருபொடிபெருவை நிரம்பகொட்டி யியல்பாகப்புடம்போடுமுப்பதப்பா, அவித்ததொருபுடந்தோறுங்கரிப்பான்சாற்று லரைத்துநீபோட்டிடுவா யடைவாய்மைந்தா, மொய்த்ததொருபுடமங்கேமுப்பதானல் முருக்கம்பூப்போலாகசெந்தூரம்பாரே. அசுரு

பாரப்பாசெந்தூரம்பணந்தான்தூக்கிப் பஞ்சதாரையிலொருவெருகடியுங்கூட்டி, நேரப்பாகுஞ்சரத்தினறுகம்வேரும் நீபொடித்துவெருகடியில்பாதிசேர்த்து,ஆரப்பாவாவினெய்யில்குழப்பிக்கொண்டு அடைவாகப்பத்துநாளருந்தினக்கால், வாரப்பாநரம்பெல்லாமயிர்தமூறி வர்த்திக்குந்தாதுவெகுவாகும்பாரே. அசுசு

வெகுவாகுஞ்செந்தூரம்பணந்தான்தூக்கி மென்பொடிதான்திரிகடுகுவெதுப்பியாட்டி, வெகுவாகுந்தேனிலேகுழப்பிக்கொண்டு வெருகடிப்பிரமாணமிருநேரமுண்ண, வெகுவாகுமண்டலந்தான்தின்றபேர்க்கு வெல்லுகிறவியாதிகளைவிபரங்கேளு, வெகுவாகுமெரிகுன்மமத்தின்குன்மம் மிஞ்சிவளர்பித்தகுன்மமற்றுப்போமே. ()

போகுமேயட்டகுன்மமகளைவெப்பு பொரியாமையெரியாமை ஆனந்தவாய்வும், வேகுமேசுரபாண்டுபித்தபாண்டு வீக்கமதில்வருஞ்சூலைவிரணந்திரு, மாகுமேசீரகத்தைவெதுப்பியாட்டி யப்பனேபணவிடைதானுலுதூக்கி, தாகுமேசீனியதில்வெருகடியுங்கூட்டி சாப்பிடவேமண்டலத்தில்விபரங்கேள். அசுஅ

கேளப்பாவாதம்போம்பித்தம்போகும் கெடியாகச்செந்தூரத் திப்பிலாதி, சூளப்பாசூரணத்தில்வெருகடிக்குள்ளே சுகமானதேன் விட்டுமண்டலந்தானுண்ண, நீளப்பாவறட்சிபோஞ்சிலேற்பனரோ கம் நீண்டவகைநாற்பதொன்றும்போகும், வாளப்பாகாமாலைபா ண்டுரோகம் வண்டுகடியெலிகடியுமகோதரமும்போமே. அசுசு

காரீயச்செந்தூரம்.

போமப்பாமேகங்களிருபத்தொன்றும் போவதற்குசெந்தூரம் புகலக்கேளு, காமப்பாகாரீயம்பலந்தானஞ்சு கரைவேயுருக்கியதை ச்சட்டிக்குள்ளே, ஆமப்பாஆவரைத்தோலரும்புபோட்டு மவைவ கைக்குரண்டுபலமரிந்துபோட்டு, வேமப்பா ஒருசாமம்வறுத்தாயா ஞல் வெள்ளையாய்த்திரும்பவதைக்கிண்டுகிண்டே. சுா

கிண்டலாம்மயில்கழுத்துநிறம்போலாகுங் கெடியாகத்திரும்ப வதுமஞ்சள்போலாம், கிண்டிவாச்செந்தூரமருணன்போலாம்கேள் மகனேகுழாயிலேயடைத்துக்கொண்டு, கிண்டியதோராவரையைச் சமூலம்வாங்கிக் கேவதன்மேல்புல்லுருவிவிளாம்பிசின்பொடித்துக், கிண்டியேகதலித்தோல்பழந்தானுதல்கிடைச்சதொன்றில்சர்க்கரை யுங்கூட்டுகூட்டே. சுாக

கூட்டியதோர்மருந்திலேவராகனுலு கூடவதில்செந்தூரம்வரா கனொன்று, நீட்டியதோர்தினமாறுவுண்ணச்சொல்லு நீரிழிவும்பிர மேகம்நிவர்த்தியாகும், மாட்டியதோரவரையைத்தயிலம்வாங்கி மை ந்தனேசெந்தூரமுண்ணச்சொல்லு, ஆட்டியதோர்மேகங்களிருபத் தொன்று மகிர்சூலைபிளவையவையடங்கும்பாரே. சுாஉ

அப்பிரகசெந்தூரம்.

பாரப்பாபிரமேகங் கழிச்சல்போகப் பாடுகிறேனப்பிரகசெந் தூரத்தை, யாரப்பாவிதன்பெருமைகாணவல்லா ரப்பிரகமேதென் ருல்சத்திநாதம், போரப்பாரோகங்களிதனைக்கண்டாற் பொரிவிட் டபஞ்சுபோல்பொசுங்கிப்போகும், மேரப்பாகாயசித்திக்காதியாதி மேகமென்றவிருபதுந்தான்விழலாங்காணே. சுாங

காணநின்றவப்பிரகங்கிருஷ்ணவர்ணங் கனக்கவொருபலம்பத் துத்தூளாயாட்டி, பூணநின்றகல்லத்தியாலரசு புகழானஅத்தியி வைநாலுந்தோலுந், தோணநன்ருயிடித்ததனைத்தண்ணீர்வார்த்துத் துவைத்தவகையிரண்டுதினமூறவைத்து, ஊணநின்றவூறல்கொண்டு வப்பிரேக முத்தமனேயிருசாமங்கல்வத்தாட்டே. சுாச

ஆட்டியேயெருக்கிலையில்வாங்கிவைத்து அப்பனேபாத்தியதை எருக்கந்தோலால், மூட்டியேபொதிந்துநீயெருவடக்கி முதிரவேவ

ற்கலிபுடந்தான்போடு, நீட்டியேயூறுகின்றதண்ணீர்விட்டு நினைவா கவிப்படியேபுடந்தோறுந்தான், நாட்டியேபுடமேதுவிருபத்தொன் று நயமாகப்போட்டுவரச்செந்தூரமாமே. ௬௱௫

ஆமப்பாசெந்தூரங்காவிபோல வாகுமடாவெடுத்து குன்னையடை த்துக்கொண்டு, ஓமப்பாசெந்தூரஞ்சலத்திற்போட்டா லுள்ளடங் குமிகக்காதுவுறுதிமெத்த, போமப்பாவெகுதூரம்தொட்டதெல்லா ம் பொன்னாகுமிதிற்சூதம்புகுந்ததாலே, நாமப்பாவிதில்சித்தியனே கம்பெற்றோம் நாதாக்கள்பலமுகமாய்ப்பார்ப்பார்காணே. ௬௱௬

தானென்றசெந்தூரம்வராகன் தூக்கித் தனித்தேதானிருபது நாள்சாப்பிட்டாக்கால், ஊனென்றமேகங்களிருபத்தொன்று மோ டிப்போந்தூலவுடலிறுக்கிக்கட்டு, மானென்றகுஷ்டரோகங்கொண் ணூற்றாறும் வாடைபட்டால்நிமிஷத்தில்மாண்டுபோகும், தேனெ ன்றமொழியுடையாளெந்தநாளுந் தேகத்தைநீக்கங்காணாதுவு ண்மே. ௬௱௭

இரசசெந்தூரம்.

உண்ணுகிறசலக்கழிச்சலனைத்தும்நன்று யொழியுகிறசெந்தூ ரமுரைக்கக்கேளு, உண்ணுகிறசூதமொருபலந்தான்பத்து உத்தம னேசுத்திசெய்தவூட்டக்கேளு, உண்ணுகிறசத்திசொல்லேனபங்க ள்செங்கல் ஓட்டையின்தூளுடனேயுகந்துசெய்து, உண்ணுகிற வெங்காரம்பலந்தான்முற்ற வுற்றநெல்லிக்கெந்தியொருபலந்தான் மூன்றே. ௬௱௮

மூன்றுகவிதூரண்டும்பொடிதான்செய்து முதிரவேகலசமொ ன்றுசிறிதாய்வாங்கி, மூன்றுனகலசத்திற்பொடியாதியிட்டு முறை யாகவதின்பிறகுசூதம்விட்டு, மூன்றுனகால்படிதான் சூடமிப்பூவும் முன்னிட்டுப்பின்புநீ பொடியுமிட்டு, மூன்றுகுமுருவிதனைச்சுமூல மாட்டி முன்மருந்துமடைமருந்துமூடுமூடே. ௬௱௯

மூடியேயோடுவைத்துச்சீலைசெய்து முறைமையோடேயிப்படியே மூன்றுசீலை, நாடியேசெய்தபின்புபானைக்குள்ளே நலமாகக்குறுணி மணல்நடுவேகொட்டி, நீடியேகலசத்தைதப்பானைக்குள்வைத்து நினை வாகச்சீலைசெய்துமண்ணுஞ்செய்து, ஆடியேதொண்ணூறுகடிகை நீதா னுறமூட்டுசெந்தூரமுருக்கம்பூவே. ௬௱௰

முருக்கம்பூப்போலிருக்கும்செந்தூரத்தில் மூன்றுடைத்தூக்க மதில்நிறுத்துக்கொண்டு, பொறுக்கவேதெனிலேமண்டலந்தானுண் ணு போனசலக்கழிச்சலனைத்தும்போகும், முருக்கவேபெரும்பு ருக்கிகிரிச்சனங்களாறு மூட்டிடைதோபிரமேகத்துக்காசகாசம், சுரு க்கவேகிராணிபோம்பெரும்பாடுபோகும் துயர்நீங்கசுகமாகக்கொ ள்ளச்சொல்லே. ௬௱௰௧

சொல்லக்கேள்ரசபற்பசெந்தூரத்தைச் சூட்டுகிறேன்புலத்தியனேசுருக்கமாகச், சொல்லக்கேள்சூதமொருபலந்தான்தூக்குச் சமமானகெந்தகந்தான்பலந்தான்தூக்கு, சொல்லக்கேளுருவியுப்புபலன்கால்சேர்த்து துவளவேயிவைமூன்றுந்தூளாயாட்டிச், சொல்லக்கேள்தாம்பிரந்தாற்சிமிருண்டாக்கிச் சூட்டுகிறமருந்துவகைதொகுத்துக்கேளே. ௬௬௨

கேளப்பாயிந்துப்புகழஞ்சிதூக்கிக் கெந்தகந்தான்பொடியுடனேசேர்த்துநீயும், வாளப்பாசிமிழுக்குள்பொடியைத்தூவி மைந்தனேசூதகத்தைநடுவேவைத்து, நீளப்பாமுன்பொடியைமேலுமிட்டு நினைவாகமூடியதைநக்கம்பிகொண்டுகட்டி, கோளப்பாசீலைசெய்துமண்ணுஞ்செய்து குக்கிடத்தின்புடம்போடுசெந்தூரமாமே. ௬௬௩

ஆமப்பாசெந்தூரம் பணந்தான்தூக்கி யாவரையின்விதைப்பொடியில் விளாம்பிசினுங்கூட்டி, நாமப்பாதேனிலே குழைத்துக்கொண்டு நலமாகவெட்டுநாள்தின்றுயானாற், போமப்பாசலக்கழிச்சலெனும்புருக்கிச் சூலைபுண்போகுமின்னமொரு செந்தூரம்பாரு, வேமப்பாவியாதிகள்தான்பருத்திவேர்த்தோல் விபரமுடனுரிந்துநீநனையப்போடே. ௬௬௪

போட்டேதானூறியபின்மறுநாள்வாங்கிப் புகழாகப்பிசைந்துமந்தத்தண்ணீர்வார்த்து, நாட்டேதான்தெளிபத்துச் சூதம்பத்துநலமானவரிதாரங்கழஞ்சியஞ்சு, நீட்டேதான்நாற்கழஞ்சிகெவுரிதூக்கு நேராகவொருசாமமாட்டிநீயும், மூட்டேதான்குமரிச்சாறுகொண்டுசாமமுளர்பதத்திற்றூளாக்கிக்குப்பிக்கேற்றே. ௬௬௫

ஏற்றியேசீலைமண்தானேழுசெய்து இயல்பாகவுலர்ந்தபின்புகாழிக்குள்ளே, மாற்றியேமண்ணுவிரல்கனமிட்டு மைந்தனேகுப்பியைத்துவாய்மூடாமல், சாற்றியேகுப்பிவாய்திறந்துவைத்துச் சாதகமாய்கழுத்துமட்டுமணலுங்கொட்டிப், போற்றியேநாற்சாமமெரித்துநன்றாய்ப் பொங்கினால்சலாகைகொண்டுகிண்டியாற்றே. ௬௬௬

ஆற்றியேநாழிகைதான்முப்பதானால் பின்குழிக்குள்ளேதண்ணீர்விட்டு, ஆற்றியேகுப்பிதனைக்குழிக்குள்வைத்து வாறியபின்தூளாக்கியதன்றேயொடாக்க, வாற்றியேமுன்போலகெந்திவீர மிரிதாரமாகநிறையாகத்தானே, ஆற்றியேகுப்பிக்குள்முக்கால்வாசி யமைத்துநீமூன்றுதாஞ்செந்தூரமாக்கே. ௬௬௭

ஆக்கியதோர்செந்தூரம்பணந்தான்தூக்கி யனுபானமறிந்தேதான்வியாதிக்கெல்லாந், தாக்கியதோரஞ்சநாளுண்ணவேதான் சக

ஸசங்கதோயெல்லாம்சாடிப்போகும், பாக்கியமேசெய்தவர்க்கிந்நூல்தான் பாவியென்றாலகாயபத்திவேணும், தேக்கியதோர்செந்தூரமின்னஞ்சொல்வோம் செயரசப்பிரளையமென்றசெந்தூரந்தானே.

செயரசப்பிரளயம்.

தானென்றசூதமது பலந்தான்மூன்று சாதகமாங்கெந்தியொருபலமிரண்டேகால், தேனென்றசெம்முள்ளிச்சாறுவார்த்துத் திறமாகநாளொன்றுதிரளவாட்டி, மானென்றதக்காளி மணத்தக்காளி மைத்தனேசாறுவிட்டுதினந்தானொன்று, கோனென்றசெருப்படிச்சார்தினந்தானொன்று குறையாமல்மாதளஞ்சார்தினந்தானொன்றே.

ஒன்றானமூன்றுதினமாதளஞ்சாருத்தமனேமூன்றுதினஞ்செம்பருத்தம்பூச்சாறு, ஒன்றாகவுலர்த்தியதைத்தூளாயாட்டி யுறவாகக்குப்பிக்குள்ளேழுசீலைசெய்து, ஒன்றாகவாறியபின் மருந்துதன்னை யுற்பனமாய்குப்பிமுக்கால்வாகியிட்டு, ஒன்றாகக்குப்பிவாய்வலைப்பக்கல்லா னுறமூடிக்கவிசிக்கமருந்துகேளே. ௬௨ய

கேளப்பாகடுக்காயுங்குளவிமண்ணுங் கெடியானவிந்துப்புக்கோலரக்கு, காளப்பாபழங்கிட்டக்கருவேலம்பிசினும்நலமானபொன்மெழுகுவெள்ளைக்கல்லு, மாளப்பாவிவையெல்லாம்செங்கருவாலாட்டி யப்பனேசுண்ணமுடன்வெல்லக்கூட்டி, நீளப்பாமுன்கருவாலாட்டிப்பின்பு நேராகப்பழச்சாறுவிட்டேயாட்டே. ௬௨௧

ஆட்டியதோர்மருந்ததுவும்பிசின்போலாகு மப்பனேகுப்பிவாயடைத்துக்கட்டி, நீட்டியேயோட்டடுப்புக்குள்ளே தாழ்நீவைத்து நாற்குறுணிமணலுங்கொட்டி, நாட்டியேதாழ்முக்கால்மணலுமிட்டு நலமாகக்குப்பிதனைநடுவேவைத்து, மூட்டியேமூடாமல்நால்விரல்தான்தெரிய முசியாமலடுப்பேற்றித்தியானஞ்செய்யே. ௬௨௨

தியானமென்னபராபூசைகணேசன்பூசை தெட்சணாமூர்த்திபதக்கேத்திரபாலன், தியானமென்னசித்தருக்கும்பெரியோர்க்கெல்லாஞ் சிறப்பாகப்பூசைசெய்துதீயைமூட்டி, தியானமென்னமுத்தீயும்வேழுசாம தீயிட்டுயாறியபின்செப்பக்கேளு, தியானமென்னசெந்தூரம்பொங்கிற்றானல் சிலாகைகொண்டுகுப்பிவாய்க் கிண்டுகிண்டே. ௬௨௩

கிண்டியேகற்றாழஞ்சோறுகொண்டுகிழிகட்டிவாய்தன்னிலொத்தியொத்தி, மண்டியேயகுதிகட்குச்சோறுபோடு மைந்தனேகுப்பிதனையடைத்துப்பாரு, பிண்டியேயொன்றாமில்லைமுருக்கம்பூப்போல பேரானசெந்தூரமிருக்கும்பாரு கண்டியேயிதின்பேர்கள்நோய்களெல்லாங் காலனுந்திரிபுரதாண்டவனுங்காணே. ௬௨௪

